Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீ ராமாநுஜன் 245

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 6 ஜீவியச் சந்தா ரூ. 116.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி * — ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1969 ஏப்ரல்மீ ஸௌம்ய ஹு வைகாசிமீ

ஸ்ரீ:

# ஸௌம்யஸூ வைகாசிமீ முதல் பங்குனிமீ வரையில் தேவப்பெருமாள் ஸன்னிதி விசேஷோத்ஸவங்கள்.

## — வைகாசிமீ —

15—5—69 முதலாக வஸந்தோத்ஸவம் 7 நாள்
21—5—69 to 30—5—69 நம்மாழ்வாருத்ஸவம்
23—5—69 கடை வெள்ளி
28—5—69 பிரம்மோத்ஸவ த்வஜாரோஹணம்
30—5—69 பெரிய திருவடியுத்ஸவம்
3—6—69 திருத்தேர்
5—6—69 தீர்த்தவாரி

## — ஆனி —

18—6—69 முதலாக கோடையுத்ஸவம் 7 நாள்
25—6—69 பெரியாழ்வார் ஆனிகருடன்
27—6—69 ஸ்ரீமந்நாதமுனிகள் சாத்துமுறை

## — ஆடிமீ —

28—7—69 ஆளவந்தார் சாத்துமுறை
29—7—69 கஜேந்திரமோக்ஷம் ஆடிகருடன்
6—8—69 திருவாடிப்பூரமஹோத்ஸவத் தொடக்கம்
15—8—69 ஆண்டாள் திருக்கல்யாணம்
16—8—69 ,, ஊர்வலம்

## — ஆவணிமீ —

27—8—69 முதலாக பவித்ரோத்ஸவம் 7
4—9—69 ஸ்ரீஜயந்தி
5—9—69 உறியடி

## — புரட்டாசிமீ —

22—9—69 நிகமாந்தமஹாகுரு சாத்துமுறை
10-10-69 முதலாக நவராத்ரி
19-10-69 பொய்கையாழ்வார்
20-10—69 விஜயதசமி, பூதத்தாழ்வார்
21-10—69 பேயாழ்வார்
4-11—69 முதலாக மணவாளமாமுனிகள் உத்ஸவம்
14-11—69 சேனையர்கோன்

## — கார்த்திகைமீ —

24-11—69 திருமங்கையாழ்வார், திருக்கார்த்திகை
25-11—69 திருப்பாணாழ்வார்
8-11—69 கார்த்திகை யனுஷம் உத்ஸவம்
9-11—69 முதலாக பகற்பத்து

## — மார்கழிமீ —

19-11—69 வைகுண்ட ஏகாதசி
28-11—69 திருவத்யயனோத்ஸவம் சாத்துமுறை
29-11—69 இயற்பா சாத்துமுறை
30-11—69 திருப்பல்லாண்டு தொடக்கம்
4—1—70 ஆண்டாள் நீராட்டவுத்ஸவத் தொடக்கம்
6—1—70 தொண்டரடிப் பொடியாழ்வார்
13-1—70 ஆண்டாள் திருக்கல்யாணம்

## — தைமீ —

14—1—70 ஆண்டாள் ஊர்கோலம்
15—1—70 சீவரம் பரிவேட்டை
22—1—70 தெப்பவுத்ஸவம் மூன்று நாள்
25—1—70 தையில்மகம், திருமழிசைப்பிரான்
28—1—70 கூரத்தாழ்வான்
6—2—70 வனபோஜனோத்ஸவம்

## — மாசிமீ —

12-2—70 ரதஸப்தமி
15—2—70 திருக்கச்சிநம்பிகள்
16—2—70 தென்னேரித் தெப்பம்
18—2—70 குலசேகராழ்வார்
21—2—70 ராஜகுளத் தெப்பம்
22—2—70 தவனவுத்ஸவம் மூன்று நாள்

## — பங்குனிமீ —

16—3—70 முதல் பங்குனியுத்தரத் திருநாள் 7 நாள்
23—3—70 ஊர்கோலவுத்ஸவம்
25—3—70 முதல் பல்லவோத்ஸவம் 7 நாள்
5—4—70 உடையார்பாளைய உத்ஸவம்
7—4—70 ஸம்வத்ஸராதி
14—4—70 தமிழ் வருஷப் பிறப்பு.

# ஸ்ரீ ராமாநுஜன் — 245



சென்னை ஸம்ஸ்க்ருத ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 21 | ஸௌம்யஹூ வைகாசிமீ 1969 மே வெளியீடு. | ஸஞ்சிகை 5


## நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி.

### 15. திருக்கண்டியூர்.

பேசவரின் தென்னரங்கன பேரெல்லாம் பேசுகவாய்
கேசவனைக் காண்கவிழி கேட்கசெவி—ஈசனூர்
உண்டியூர் தோறு முழனறிரவா மல்தவிர்த்தான்
கண்டியூர் கூப்புகவென் கை.

| | | | |
|---|---|---|---|
| வாய் பேசவரின் | எனது வாயானது ஏதேனும் பேசத் தொடங்கினுல் | என் கை | எனது கைகள் |
| தென் அரங்கன் பேர் எல்லாம் பேசுக | திருவரங்கனது திருநாமங்களை யெல்லாம் பேசக்கடவது; | ஈசனூர் ஊர்தோறும் உழன்று உண்டி இரவாமல் தவிர்த்தான் கண்டியூர் கூப்புக | சிவபிரான் ஊர்தோறும் அலைந்து சென்று பிக்ஷையெடுக்காதபடி அவனது சாபத்தைப் போக்கியருளின அப்பெருமானுடைய திருக்கண்டியூரை நோக்கி அஞ்சலி செய்யக் கடவன. |
| விழி கேசவனை காண்க | எனது கண்கள் எம்பெருமானையே காணக் கடவன; | | |
| செவி (கேசவனை) கேட்க | எனது காதுகள் அப்பெருமானைப் பற்றியே கேட்கக் கடவன; | | |

* * * திருக்கண்டியூரைப் பாடினவர் திருமங்கையாழ்வாரொருவரே. அவர் தாம் *பிண்டியார் மண்டையேந்திப் பிறர்மனை திரிதந்துண்ணு முண்டியான் சாபந்தீர்த்த வொருவனூர் உலகமேத்துங் கண்டியூர்* என்றருளிச்செய்ததை அடியொற்றி "ஈசனூர் ஊர்தோறு முழன்று உண்டியிரவாமல் தவிர்த்தான் கண்டியூர்" என்று பணித்ததிங்கு. இத்தலத்தெம்பெருமான் 'அரன்சாபந்தீர்த்த பெருமாள்' என்ற திருநாமத்தினுல் வழங்கப் பெறுதல் அறிக. திருக்கண்டியூர் பாடலான இச்செய்யுளில் (முதலடியில்) தென்னரங்கனை யும் பேசினது—ஸகல திவ்ய தேசங்களும் திருவரங்கம் பெரிய கோயிலுக்கு அவயவபூதங்களென்னும் ஸம்பிரதாயத்தைக் காட்டும். இந்த முறை மற்றும் பல செய்யுள் களிலுங் காணத்தக்கது. ... ... ... ...

# ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலை வெளியீட்டு விண்ணப்பம்.

ஆசார்ய ஸார்வபௌமரான மணவாளமாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகளை யெல்லாம் மாலையாக வெளியிட மனோரதங்கொண்டு ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலை யென்னும் பெயரால் தொடங்கின மாலையில் முதல் ஸம்புடம் 1966 பராபவவாண்டு ஐப்பசித் திருமூல நன்னாளில் வெளியிடப்பட்டதென்பதை உலகமறியும். அந்த முதல் ஸம்புடத்தில் வெளிவந்த க்ரந்தங்களாவன—

1. ஸ்ரீ தேவராஜமங்களம்.
2. ஸ்ரீகாஞ்சி திவ்யதேசஸ்துதி.
3. யதிராஜவிம்சதி.
4. உபதேச ரத்தினமாலை.
5. திருவாய்மொழி நூற்றந்தாதி.
6. ஆர்த்திப் பிரபந்தம்.
7. ஞானஸாரப்ரமாண யோஜனை.
8. ஜீயர்படியென்னும் நித்யக்ரந்தம்.
9. முமுக்ஷுப்படி வியாக்கியானம்.
10. தத்வத்ரய வியாக்கியானம்.
11. ஸ்ரீ வசனபூஷண வியாக்கியானம்.
12. ஆசார்யஹ்ருதய வியாக்கியானம்.

ஆக இப்பன்னிரண்டு திவ்யக்ரந்தங்களாம். அந்த ஸம்புடத்தின் விலை 25—00.

பிறகு இரண்டாவது ஸம்புடம் பராபவவாண்டிலேயே வெளிவந்திருக்கவேண்டும். நேற்று பங்குனித் திருமூலத்தன்றுதான் வெளிவந்தது. இவ்வளவு காலதாமதமானதற்குக் காரணம் இன்னதென்று விஜ்ஞாபிக்க முடியாதபடியுள்ளது. பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானம் முடிந்து வெளிவந்துவிட்டது.

இனி சேஷித்துள்ள திவ்யக்ரந்தங்கள் பூர்த்திபெறுவதற்கு மூன்றாவது ஸம்புடமும் வெளிவரவேண்டியது அவசியமாகின்றது. அதில் முக்கியமாக நிற்பது ப்ரமாணத்திரட்டுகளின் ப்ரகாசனம். அதனை எந்த லிபியில் செய்வதென்பது விசாரத்திலுள்ளது. பகவத் பாகவத ஆசார்ய க்ருபாகடாக்ஷத்தினால் அது வெளிவருங்காலத்தை அன்பர்கள் எதிர்பார்த்திருப்பதென்று இவ்வளவே விஜ்ஞாபிக்கிறேன். சிறிது தாமதமானாலும் வெளிவந்தேதீரும்.

## (இப்போது வெளிவந்த இரண்டாம் ஸம்புடத்தைப்பற்றி)

பெரியவாச்சான்பிள்ளை நாலாயிரத்திற்கும் பூர்த்தியாக வியாக்கியானமருளிச் செய்திருந்தும் அதில் பெரியாழ்வார் திருமொழி முதற்பாசுரந்தொடங்கி *வாக்குத்தூய்மை யிலாமையினாலே மாதவாவுன்னை* (5-1-1.) என்னுமளவும் வியாக்கியானம் கரையானுக்கு இரையாகி லுப்தமாய்விட்டபடியாலே அவ்வளவுக்கு மாமுனிகள் வியாக்கியானமிட்டருளினார். அதுவும், மேற்பகுதிக்குப் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானமும் இதில் வெளிவந்து பூர்த்தியாயிற்று. இதன் விலை 10 ரூ. தபாற் செலவு தனி.

ஸ்ரீ வைஷ்ணவதாஸன், அண்ணங்கராசாரியன்.

# அடியேனுடைய வடநாட்டுச் சிறுயாத்திரை.

## இருபத்துநான்காவதான ஹரித்வார ஸேவை

சென்ற மார்ச்சுமீ 9 தேதியிலிருந்து இருபத்து மூன்றுந்தேதிவரையில் இரண்டு
வாரம் அடியேனுக்கு வடநாட்டுச் சிறுயாத்திரையொன்று அசிந்திதமாக ப்ராப்தமாயிற்
றென்பதை மனமகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். பல நண்பர்களின்
கோரிக்கையை அநுஸரித்துச் சிறிது விளக்கி விஜ்ஞாபிக்கிறேன். "இருபத்து நான்காவதான
ஹரித்வார ஸேவை" என்று முகப்பில் எழுதியுள்ளேன். 1916-ஆம் வருஷத்தில் மூதன்
முதலாக அடியேன் வடநாட்டுப் பயணம் தொடங்கினேன். அப்போது, அஸ்மதாசார்ய
ரான ஸ்ரீ ஜகத்குரு காதிஸ்வாமியின் நியமனத்தினால் மஞ்ஜுபாஷிணி யென்னும்
ஸம்ஸ்க்ருத பத்ரிகையை வாரந்தோறும் வெளியிட்டுக்கொண்டிருந்ததனால் அதன்
மூலமாக வடநாட்டினர் பலரும் என்பால் பேரன்பு பூண்டிருந்தபடியால் தென்னாட்டிற்
காட்டிலும் வடநாட்டில் அதிகமான ஆதரவு கிடைக்கப் பெற்றது. அதுவேகாரணமாக
இரண்டு வருடங்களுக்கு ஒரு முறை வடநாட்டுப் பயணம் நியமேந செய்து
கொண்டிருந்தேன். ஸ்ரீ பதரிகாச்ரம பர்யந்தமாக மூன்று விசையும், ஹரித்வார
ஹ்ருஷீகேச பர்யந்தமாக இருபது விசையும் ஆக இருபத்து மூன்று தடவை உத்தரபாரத
ப்ரயாணம் க்ஷேத்ரதீர்த்த ஸேவைக்கென்றே ப்ராப்தமாகியிருந்தது

முதல் தடவையில் ஒருவரைமட்டும் துணைகொண்டு சென்று வந்தேன். மற்ற
பர்யாயங்களில் ஏழெட்டு துணைவர்களுக்குக் குறைந்து புறப்பட்டதில்லை. எழுப
தெண்பது நபர்களுடன் செய்த யாத்திரைகளும் ஏழெட்டு விசையுண்டு. 1958-ஆம்
ஆண்டுக்குப் பிறகு ஒருவிசை டில்லிக்கும் ஹரித்வாரத்திற்கும் சென்று திரும்பலாயிற்று.
ஸ்ரீ ப்ருந்தாவனத்தில் ப்ரஹ்மோத்ஸவம் வெகு சிறப்பாக நடைபெறுகின்றதென்று
கேள்விப்பட்டிருந்தேனாதலால் ஒருவிசை சென்று ஸேவிக்கவேணுமென்கிற குதூஹலம்
பலவாண்டுகளாக விருந்தது. 1964-ஆம் வருஷத்தில் இந்த குதூஹலம் நிறைவேறப்
பெறுமென்று திண்ணமாக வெண்ணி 27—2—64ல் புறப்படுவதாக நிச்சயித்து
ஸம்விதானமும் செய்திருந்தேன். அப்போதுதான் திடீரென்று 21—2—64ல் ஹ்ருதய
கோச நோய் ஏற்பட்டு அந்தப் பயணம் தடைபட்டு விட்டது. அப்போது ஜீவித
ஸந்தேஹமும் உண்டாகியிருந்ததெனினும் பகவத்பாகவத க்ருபா பலத்தினால் நாளடைவில்
ஒருவாறு ஸ்வாஸ்த்யமுண்டாகியிருந்தும் அசக்தி அதிகரித்துக்கொண்டே வந்ததனால்
'இனி இவ்வாழ்நாளில் வடநாட்டுப் பயணத்தை நெஞ்சால் நினைக்கவுமாகாது' என்று
நிராசை செய்து ஐந்து வருஷமாயிற்று.

எம்பெருமானுடைய ஸங்கல்பத்தை யாரேயறிவார்? பெரும்பாலும் பங்குனி
விசாகத்தினிடையில் நிகழுமதான ஸ்ரீ ப்ருந்தாவன ப்ரஹ்மோத்ஸவம் இவ்வாண்டு மாசி
யிறுதியில் தொடக்கமாகிப் பங்குனி இரண்டாந்தேதியில் அவப்ருதமாகிறதென்று அறிந்தது
முதல் மனோரத ப்ரவாஹங்கள் மீதூர்ந்து சென்றன. ப்ரஹ்மோத்ஸவத் தொடக்கத்திற்கே
விருந்தாவனம் சென்று சேரவேணுமென்று குதுகலித்திருந்தும், திருவல்லிக்கேணி

வேதவேதாந்த வர்த்தினியின் சதாப்தி நிகழ்ச்சியின் ஸமாப்தியில் அங்வயித்தேயாக வேணுமென்று ஸஹ்ருதயஸஹ்ருந் மணிகள் நியமித்தருளினதை மீற முடியாமையினால் 9—3—69ல் நிகழ்ந்தவதற்கு இருந்துவிட்டு அன்றிரவே புறப்படலாயிற்று. எப்போதும் தனிப் பயணத்தில் ருசியுடையேனல்லேனாதலால் யாத்ருச்சிகமாகச் சில துணைவர்கள் கூடினர். நமது (சென்னை) ஸத்காலக்ஷேப ஸபையின் தலைமைக் காரியதர்சியான ஸ்ரீமான் ஸுப்ராயலு செட்டியாரும், ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் தலைமைக் கார்யதர்சியான ஸ்ரீமான் V. N. தேவநாதனும், Free India பத்திராதிபரான ஸ்ரீமான் D. கிருஷ்ணமூர்த்தி ஐயங்காரும் மற்றுஞ்சில பரிவர்களும் உடன்கூட ஆனந்தமாகப் புறப்படலாயிற்று.

## —ஸ்ரீ ப்ருந்தாவன ப்ரஹ்மோத்ஸவ வைபவம்—

ஐந்தாவது திருநாள் காலை விருந்தாவனம் சேர்ந்து அவப்ருதமளவும் அங்கேயிருந்து அநுபவிக்க ப்ராப்தமாயிற்று. ஹரித்வாரபர்யந்தம் இருபத்து மூன்று விசை ஸேவிக்கப் பெற்ற நமக்கு ஸ்ரீ ப்ருந்தாவனமும் இருபத்து மூன்று விசை ஸேவிக்க ப்ராப்தமானதே. தென்னாட்டில் உயர்ந்த திவ்ய தேசமாக விளங்கும் திருவரங்கம் பெரிய கோயிலை ஒரு புடையொத்திருப்பது இத்தலம் என்று கூறக் குறையில்லையன்றே. ஸன்னிதியின் ஸந்நிவேசம் வெகு மனோஹரமானது. ஊரும் நாளடைவில் மிகவிஸ்தாரமடைந்து விட்டது. வடநாட்டினரான பக்த மணிகள் பலவாயிரக் கணக்கில் திரண்டு அநுபவிக்கு மிந்த மஹோத்ஸவம் தென்னாட்டு மஹோத்ஸவங்களை அதிசயித்திருக்கின்றதென்றே சொல்லலாம். தேவஸ்தான அதிகாரிகள் தென்னாட்டிலிருந்து சில அத்யாபக ஸ்வாமிகளை இதர்பரமாக வரவழைப்பதனால் இயல் கோஷ்டியும் சிறப்பாக நடைபெற்றது. ஆதியிலிருந்தே வேதபாராயண கோஷ்டியின் ஸ்தானத்தில் ஸ்தோத்ரபாட கோஷ்டியை நித்யநைமித்திகாதி ஸகலோத்ஸவங்களுக்கும் ஏற்படுத்தியிருப்பதனால் பஞ்சஸ்தவ ஸ்ரீரங்கராஜஸ்தவாத்யநுஸந்தானம் பின்னால் பெருந்திரளாக நடைபெற்று வருகிறது.

தேவஸ்தானத்தைச் சேர்ந்த பெரிய தோட்டத்திலுள்ள மண்டபத்திற்கு தினப்படி இரண்டு வேளையும் எழுந்தருளி கோஷ்டி நடைபெறுகிறது. இதில் ஒரு விசேஷம் ஆச்சரியமாகத் தோன்றியது. (அதாவது) தேவஸ்தானத்தின் சார்பாக ஸம்ஸ்க்ருத பாடசாலை நெடுநாளாக நடந்து வருகிறது; அதில் ஏறக்குறைய நூறு வித்யார்த்திகள் ஸாஹித்யம் முதல் சாஸ்த்ரங்கள் வரையில் அதிகரிக்கிறார்கள். உத்தீர்ணர்களான வித்வான்கள் பத்தெட்டு பேர்கள் உபாத்யாயர்களாக விளங்குகிறார்கள். இவர்கள் கூடி இரு வேளைகளிலும் (தோட்டத்தில்) சாஸ்த்ரார்த்த சர்ச்சை நடத்துகிறார்கள். இது தென்னாட்டினரால் அநுகரிக்கத்தக்கதென்று தோன்றிற்று.

சில பெரிய உத்ஸவ நாட்களில் வாணவேடிக்கை நடக்குமதிசயம் நமது நாட்டில் எங்குமே காணாததும் காணமுடியாததுமான விசேஷம். குதிரை வாஹன மஹோத்ஸவத்தன்று ஆயிரம் ரூபாய்க்கு மேற்பட்ட செலவில் நடந்த வாணவேடிக்கையும் லக்ஷக்கணக்கில் கூடின பக்தர்களின் திரளும் மஹாநகரங்களிலும் காணமுடியாதது. பங்குனிமீ இரண்டாந்தேதி திருவோணத்தன்று அவப்ருதோத்ஸவம். அன்று நித்யக்ரமத்

தில் உத்ஸவம் நடைபெற்று முடிந்தபின் ரங்கமன்னரும் ஆண்டாளும் தூயபெருநீர் யமுனைத்துறைக்கு எழுந்தருளி நடுப்பகலில் அவபிரதம் கண்டருளுமழகு கண்கொள்ளாக் காட்சியென்று ஒரே சொல்லில் முடிக்கத்தக்கதேயொழிய வருணிக்கும் வகையறியோம். ஒவ்வொருநாளும் பகலில் அலங்கார திருமஞ்சனம் கண்டருளுமழகு மிகவிலக்ஷணமானது. அவதார புருஷராய் விளங்கின கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமத் கோவர்த்தனம் ரங்காசார்ய ஸ்வாமி வெகு சாதுர்யமாக ஏடுபடுத்திவைத்தருளியிருக்கும் கட்டளைகள் ஒன்று தவருமல் அப்படியப்படியே பரிபாலிக்கப்பட்டுவருவது மிக அற்புதமானது. அந்த மஹா புருஷருடைய காலத்தில் இல்லாத சில பரிஷ்கார முறைகளும் பிற்காலத்தில் தோன்றியிருக்கலாம்; அவற்றுள் எனது மனத்தைக் கவர்ந்த ஆகர்ஷித்ததொன்றை இங்குத் தெரிவிக்கிறேன். வாத்யவகைகளில் பாண்டு வாத்யமென்பது தென்னுட்டிலும் விசேஷமாகவுள்ளதுதான். ஆனல் அங்குக் கேட்ட நாதம் அங்குத்தான் கேட்கக்கூடியதென்று தோன்றிற்று. சங்கீதச் சுவையறிவுக்கு நெடுந்தூரத்தனுன எனேயும் வலிய ஈர்த்த நாதம் அதுவென்றல் இன்னமும் விவரிக்கவேணுமோ? நம் தேவப்பெருமாளுடைய வைசாகோத்ஸவத்திற்கு ஒருவிசையாவது அந்த வாத்யக்காரர்களே வரவழைத்து அனைவரையும் பேரின்பவெள்ளத்தில் அமிழ்த்தவேணுமென்று தோன்றிற்று.

குவாளியர் நகரத்திலெழுந்தருளியிருக்கும் ஸ்ரீமதுபயவே. S. ஸத்யமூர்த்தி ஸ்வாமியை நம் ஸ்ரீ ராமாநுஜன் வாயிலாகப் பலநும் அறிந்திருப்பர்களே. அந்த ஸ்வாமி அடியேனுடைய ஸஹயோகத்தைக் கருதி க்வாளியரிலிருந்து கூடவேயெழுந்தருளி நாலைந்துநாள் உசாத்துணையாக உடனிருந்ததை உவப்புடன் விஞ்ஞாபிக்கிறேன்.

இந்த ப்ரஹ்மோத்ஸவத்தில் வெளியூர்களிலிருந்து பல வித்வான்கள் வந்து ஸன்னிதி முகப்பிலுள்ள மஹாமண்டபத்தில் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்மேளனம் நடத்துவது வழக்கமாம். அதுவும் உத்ஸவாவிரோதேந சில நாட்களில் நடந்தது. ஒருநாள் ஸ்ரீ பாஷ்ய மங்கள ச்லோகத்தைப்பற்றி ஸம்ஸ்க்ருதோபந்யாஸமும், மற்றொருநாள் *கோவர்த்தநோ கிரிவரோ யமுநா நதீஸா* என்கிற கூரத்தாழ்வான் ச்லோக ரத்னத்தைப் பற்றி ஹிந்தியிலும் உபந்யஸிக்க அவகாசம் கிடைத்ததடியேனுக்கு. இவ்வளவோடு ப்ருந்தாவனுநுபவத்தை முடித்துக்கொண்டு, மேலுள்ள இடங்களின் அநுபவங்களை இனி விவரிக்கிறேன்.

இடையில் ஒரு சிறு விண்ணப்பம். புது டில்லியில் வாழும் ஸ்ரீமான். A ராமாநுஜாசாரியர் விருந்தாவனத்திற்கே வந்து சேர்ந்து, டில்லி ஹரித்வாரம் ஹ்ருஷீகேசம் முதலானவிடங்களிலும் உடனிருந்தபடியால் அவர்தாம் தமது மகிழ்ச்சிக்குப் போக்குவீடாக எழுதியனுப்பிய கட்டுரையொன்று மேலே வெளிவரவிருக்கின்றது; ஆயினும் எனது த்ருப்திக்காக நானெழுதுவதையுங் காண்மின்.

அடியேன் வடநாடு புறப்பட்டது ப்ருந்தாவன ப்ரஹ்மோத்ஸவ ஸேவையை யுத்தேசித்தேயாகிலும் ஹரித்வார ஹ்ருஷீகேச ஸேவையில் குதூஹலமும் நெஞ்சில் குடிகொண்டிருந்தது. டில்லி மாநகரைக் கடந்தே அவ்விடங்களுக்குச் செல்ல வேண்டியிருந்தாலும். நெடுநாளாக டில்லியில் பரமாப்தர்களாகவுள்ள பல பெரியார்களின் நியமனங்களை நிறைவேற்றவேண்டியிருந்தபடியாலும் 16-3-69 ஞாயிற்றுக்கிழமை காலை மாலைகளிலும், மறுநாள் திங்கட்கிழமை மாலையிலும் அவ்விடத்து நிகழ்ச்சி முறைகளையச்சிட்டு [டில்லிநகர்ப் பெரியார்கள்] வெளியிட்டிருந்தபடியாலும் குறிப்பிட்டகாலத்தில் அங்கே சென்று சேரலாயிற்று.



அவ்விடத்து ஸ்ரீ வைஷ்ணவ ஸமூஹத்தாரில் தற்காலம் உயர்பதவியை யலங்கரித்து கரோல்பாக் என்னுமிடத்தில் விளங்குபவர் ஸ்ரீமதுபயவே. P. V. S. ஐயங்கார் என்று ப்ரஸித்தரான மஹான். இவர் ப்ரதிவாதிபயங்கர குலதிலகருமானபடியால் இவருடைய திருமாளிகையில் ஜாகை அமைத்துக்கொள்ளலாயிற்று. சில வருஷகாலமாக இவ்விடத்தில் ஸ்தாபிக்கப்பட்டுள்ளது கோதாஸங்கம் என்பது. இச்சங்கத்தின் சார்பாக முதலுபந்யாஸத்தை நடத்திவைக்க விரும்பிய பெரியார்கள்



விலக்ஷணமாக அமைத்த பந்தலில் உபந்யஸிக்க நியமித்தார்கள். ஞாயிறு காலை அவ்விடத்தில் 'திருப்பாவையின் ஸாரார்த்தம்' என்பது பற்றி விஜ்ஞாபிக்கப் பட்டது. திருப்பாவை சாத்துமுறையில் விசேஷத் தனியனுக அநுஸந்திக்கப்பட்டு வருமிரண்டு வெண்பாக்களுள் பிந்தின வெண்பாவான "பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும், வேதமனைத்துக்கும் வித்தாகும்—கோதை தமிழ் ஐயைந்துமைந்துமறியாத மானிடவரை, வையஞ் சுமப்பதும் வம்பு" என்கிற செய்யுளையும். பட்டர் அருளிச்செய்த தனியனுன *நீலாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தம்* இத்யாதி ச்லோகத்தையும் மூலமாகக் கொண்டு உள்ளுறை பொருளான விஷயங்கள் விஜ்ஞாபிக்கப்பட்டன.



இங்கே பிரசுரிக்கப்படும் ப்ளாக்குகளைப்பற்றி ஓர் அறிவிப்பு. டில்லிமாநகரில் ஆறு இடங்களில் உபந்யாஸங்கள் நடந்தன. எந்த படம் எவ்விடத்தது என்பது எமக்கு நினைவில்லை. வெளியிடவேணுமென்று டில்லிப் பெரியார்கள் அங்கிருந்து அனுப்பிவைத்த ப்ளாக்குகள் வரிசையாக வெளியிடப்படுகின்றனவத்தனை.



16—3—69 ஞாயிற்றுக்கிழமை மாலையில் லக்ஷ்மிபாய் நகரில் மதராஸி ஸ்கூலின் மிகப் பெரிய மைதானத்தில் 'உபய வேதாந்த ஸாரம்' என்பதுபற்றி விஜ்ஞாபிக்கலாயிற்று. "ஸம்ஸ்க்ருத வேதாந்தம் பயவேதாந்தம்; த்ராவிட வேதாந்தம் அபய வேதாந்தம். இவ்விரண்டையும் சேர்த்து உபய வேதாந்தமென்கிறோம்" என்கிற பீடிகையிட்டு விஜ்ஞாபித்த விஷயத்தின் சுருக்கமாவது, ஆஸ்திகரான ஒவ்வொருவரும் அல்லும்பகலும் உய்யும் வகையையே நாடுவர்கள்; வடமொழி வேதாந்தம் நமக்கு உய்யும் வகையை எவ்விதமாக உணர்த்துகின்றதென்று ஆராய்வோமாயின், அந்தணர்களனைவருமறிந்த ஒரு வேதவாக்கியம் கேளீர்; *தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி; நாந்ய: பந்தா அயநாய வித்யதே* என்பதாம் அது. இவ்வாக்கியத்தின்



பொருள் யாதெனில், அந்த பரம புருஷனை உள்ளபடி யறியுமவனே உய்பவனுவன்; உய்வதற்கு வேறு வழி கிடையவே கிடையாது என்பதாம். வேதம் இங்ஙனே ஓதியிருப்பது கண்டு ஆஸ்திகர்கள் அஞ்சவேண்டியதாகிறது: ஏனெனில்; பரமபுருஷனை உள்ளபடி யுணர்வதென்பது ஒருபடியாலும் ஒருவர்க்கும் இயலாததன்றே; *ஸோ அங்க! வேத யதி வா ந வேத* என்று வேதமே சொல்லுகிறது— எம்பெருமான்படி எம்பெருமானுக்கே தெரியுமோ தெரியாதோ! என்றது. ஆழ்வார்களும் *தனக்கும் தன் தன்மை யறிவரியான்* என்றும் *தாம் தம் பெருமை யறிபார்* என்றும் சொல்லுகிறார்கள். இப்படியிருக்க, அப்பெருமானை நாம் உள்ளபடி யுணர்ந்து உய்வதென்பது எங்ஙனே ஸாத்யம்? ஆக இதனால் அஞ்ச



வேண்டியதாக நேர்ந்தவளவில், அந்த அச்சத்தை நீக்கி நமக்கு உய்யும் வழியை யுணர்த்து கைக்கு ஆழ்வார்களின் அருளிச்செயல் அவதரித்தது. திருமங்கையாழ்வார் (திருக்குறுந் தாண்டகத்தில் *உலகமேத்துங் கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லையென்று மண்டினுர் உய்யலல்லால் மற்றையார்க்கு உய்பலாமே* என்றருளிச் செய்திருப்பதானது ஆஸ்திகர்களின் அச்சம் தீருவதற்காகவேயன்றே? கோயில் திருமலை பெருமாள்கோயில் திருநாராயணபுரம் முதலான உகந்தருளின நிலங்களிலே [திவ்ய தேசங்களிலே] மண்டி யநுபவிக்குமவர்களுக்கல்லது மற்றையோர்க்கு உய்யும்வகையுண்டோ? என்பது இப் பாசுரத்தின் பொருள். இது, கீழே யெடுத்துக்காட்டிய *தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி* என்கிற வேதவாக்கியத்திற்கு மறுப்பென்று கொள்ளாமல் அதற்கு இது விவரணம் என்றே கொள்ளத்தகும். எம்பெருமானையுள்ளபடி யுணர்வதும் திவ்யதேசங்களில் ஈடுபாடு கொண்டிருப்பதும் பரியாயமென்பது ஆழ்வார் திருவுள்ளம் என்று கொள்ளத் தகும். இந்த பீடிகையின்மீது அன்றைய உபந்யாஸம் நிகழ்ந்தது. வடமொழி வேதாந்தத்



தின் அருமைபெருமைகளும் தென்மொழி வேதாந்தத்தின் அதிசயங்களும் நம்பூருவாசாரி யர்கள் காட்டினவழியில் விஜ்ஞாபிக்கப்பட்டன. அன்று திரண்ட கோஷ்டி அடியே னுக்கே மிகவும் அதிசயத்தை விளைத்தது. கடற்கரைக் கூட்டம்போல் காணப்பட்டது.

அடுத்தநாள் 17உ திங்கட்கிழமை மாலை புதுடில்லியின் ஒரு பெரிய பகுதியாகிய ராமக்ருஷ்ணபுரத்தில் ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்த ஸபையின் சார்பில் ஒரு காலக்ஷேபம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இவ்விடத்தில் 'ஸ்ரீ ராமாயண தத்துவம்' என்பதுபற்றி உபந்யஸிக்கவேணுமென்று கோரப்பட்டிருந்தது. ஸ்ரீ ராமாயண பாராயணம் செய்பவர்க ளெல்லாரும் முகப்பில் அநுஸந்திக்கும் பல சுலோகங்களினிடையில் *வைதேஹீஸஹிதம் ஸுரத்ருமதலே ஹைமே மஹாமண்டபே மத்யேபுஷ்பகமாஸநே மணிமயே வீராஸநே ஸுஸ்திதம், அக்ரே வாசயதி ப்ரபஞ்ஜநஸுதே தத்வம் முநிப்ய: பரம் வ்யாக்யாந்தம் பரதாதிபி: பரிவ்ருதம் ராமம் பஜே ச்யாமலம்* என்கிறவொரு சுலோகம் அநுஸந்திக்கப் பட்டுவருவது உலகப் பிரஸித்தம். இந்த சுலோகத்தில் சொல்லப்படுவதென்னவென்றுல், ஸ்ரீராமபிரான் ஒரு மஹாமண்டபத்தில் ஸீதாபிராட்டியோடும் பரதலக்ஷ்மண சத்ருக்நாதிக



ளோடும் கூடியிருக்கையில் எதிரே ஸ்ரீ ராமாயணத்தைத் திருவடி வாசிக்கையில் அங்குக் குழுமியிருந்த முனிவர்களுக்கு ஸ்ரீ ராமபிரான் தானே ஸ்ரீ ராமாயண தத்வார்த்தத்தை விளக்கியருளினதாகச் சொல்லப்படுகிறது. பெருமாள் தாமே விளக்கியருளின தத்வார்த்தம் எதுவாயிருக்குமென்று விமர்சிக்கும் ப்ரணாளியில் சரித்திரங்களினுட்புகுந்து சில தத்துவப் பொருள்களை விஜ்ஞாபிக்கத் தோன்றி கேட்போர் உகக்கும் உபபத்திகளுடன் விரிவாக உபந்யஸித்தேன். அந்த கோஷ்டியில் ஆங்காங்கு ஸ்ரீராமாயண ப்ரவசனம் செய்பவர்களும் சிலர் கூடியிருந்தபடியால் அவர்கள் பிறகு அருகேவந்து "இந்த அர்த்த விசேஷங்களை ஏடுபடுத்திவைத்தால் எங்கள்போல்வார்க்கு மிகவும் உதவியாயிருக்குமே"யென்றார்கள்; அவர்களுக்குச் சொன்னேன்—நான் பிரசுரித்துவரும் வைதிகமனோஹராவென்னும் ஸம்ஸ்க்ருத பத்ரிகையில் "ஸதர்த்தஸப்தசதீ" என்னும் பெயரால் எழுநூறு அர்த்தங்களை வெளியிடுவதாக ப்ரதிஜ்ஞை பண்ணி ஆறு நூறுகளை வெளியிட்டாயிற்று; அதில் நாலாவது ஐந்தாவது நூறுகள் ஸ்ரீ ராமாயண விசேஷார்த்தங்களுக்கென்றே ஒதுக்கப்பட்டு வெளியிடப்பட்டுமிருக்கிறது; அதைப் பெற்று உபயோகங்கொள்ளலாமென்றேன். பிறகு அவர்கட்கு அந்த ஸஞ்சிகைகளும் சேர்ப்பித்தேன்.





டில்லியில் ஞாயிறு திங்கள் இரண்டுநாள் மட்டுமே யிருந்துவிட்டு மறுநாள் ஹரித்வாரம் சென்று அங்கிருந்தே ஸ்வஸ்தானம் சேருவதாக நிச்சயித்திருந்தேன். ஆனால் டில்லிவாஸிகளான அன்பர்கள் பின்னையும் சில நாட்களிருந்து உபந்யாஸம் நடத்தவேணுமென்று கோரினார்கள். செவ்வாயும் புதனும் ஹரித்வார ஹ்ருஷீகேசங்களில் போதுபோக்கு ஏற்கெனவே நிச்சயிக்கப்பட்டிருந்தபடியால் அங்குச் சென்று பிறகு மீண்டும் வருவதாகச் சொல்லிப் புறப்பட்டுவிட்டேன்.

## ஹரித்வார ஸேவை

தென்னாட்டில் திருமாலிருஞ்சோலையும், வடநாட்டில் ஹரித்வாரமும் அடியேனுக்கு விசேஷித்து அபிமானபஹுமான பாத்திரமான திருத்தலங்கள். ஆனால் ஸந்நிஹிதமான திருமாலிருஞ்சோலையைக் காட்டிலும் நெடுந்தூரத்திலுள்ள ஹரித்வாரத்தை ஸேவிக்கப்பெற்றதுதான் அதிகபர்யாயம்! இவ்விடத்தில் *ஸ்வக்ருஹே கோ விசாரோஸ்தி* என்னும்படியான இடங்கள் அடியேனுக்குப் பலவுண்டு; அவற்றுள் மூன்றிடங்கள் மிக முக்கியமானவை. அவற்றில் வருஷக்கணக்காக வஸித்தாலும் விசாரமில்லை. தேவப்பெருமானை மறந்துவிட முடியுமானால் ஹரித்வாரத்திலேயே ஆயுச்சேஷத்தைக் கழிப்பேன். 18, 19 தேதிகள் இரண்டுநாள் பூர்த்தியாக இங்கேயிருந்தேன். அதிலும் அரைநாள் ஹ்ருஷீகேசப் பயணம். ஹ்ருஷீகேசத்தில் சிவானந்தா என்கிற பெரியார் சிலவருடங்களுக்கு முன்பு மறைந்துவிட்டார். இப்போது அவருடைய ஸ்தானத்தை அலங்கரிப்பவர் க்ருஷ்ணானந்தா என்பவர். இவர் இந்த ஸ்தானத்தை யலங்கரிப்பதற்கு முன்பும் அவ்விடத்திலேயே மிகவும் பரிசிதரானவர். தேஜஸ்வியாய் விளங்குகிறார். ஆஸ்தான கார்யக்ரமங்களை முன்னிலும் விசேஷமாக வளர்த்தி நடத்திவருகிறார். புதிய புதிய கட்டிடங்களின் நிர்மாணங்கள் வியக்கத்தக்க முறையில் ஏற்பட்டிருக்கின்றன. சிவானந்த நகர் என்று பெயரிட்டதற்கு ஏற்ப இதுவொரு நகரமாகவே ஆய்விட்டது. இவ்விடத்துப் பெரியாரிடம் வார்த்தையாடிக்கொண்டிருந்தபோது கல்கி பத்ரிகையின் ஆசிரியரான ப்ரஹ்மஸ்ரீ ஸதாசிவம் அவர்கள் எதிர்பாராதவண்ணம் அவ்விடம் ஸகுடும்பராக வந்து அளவளாவினார். அவ்விடமிருந்து லக்ஷ்மணஜூலா' வரையில் சென்று பதரியைத் திசையுற்று

நோக்கித் தொழுது திரும்பியாயிற்று. வியாழன் காலையில் (20-3-69) டில்லிநகர்க்கு மீண்டுவந்து சேர்ந்தாயிற்று.

அன்று மாலை இரண்டிடத்திலும் மறுநாள் காலை ஓரிடத்திலும் உபந்யாஸம் ஏற்பாடாகியிருந்தது. முதலில் டில்லி தமிழ்ச் சங்கத்தில் தமிழ்மொழியின் சிறப்பையும் தொன்மையையும்பற்றி உபந்யஸிக்கலாயிற்று. அங்கிருந்து பிர்லா மந்திரத்தில் கீதா பவனம் என்கிற மஹா மண்டபத்திற்கு அழைத்துச் சென்றார்கள். இவ்விடத்தில் அடியேன் பல வருஷங்களில் பல உபந்யாஸங்கள் நடத்தியிருக்கிறேன். ஸ்ரீமதுபயவே. ஸர். S. வரதாசாரியர் ஸ்வாமியும், C. V. ராஜன் ஸ்வாமியும் டில்லியில் வாழ்ந்த காலம் அது. இப்போது அந்த கீதா பவனத்தில் வேதஸம்ரக்ஷணம் என்னும் 'விஷயமாக ஸம்ஸ்க்ருதத்தில் உபந்யஸிக்கவேணுமென்று நியமித்திருந்தார்கள். ஸம்ஸ்க்ருதஜ்ஞர்கள் பலர் வந்து குழுமியிருந்தபடியால் அடியேனுக்கு மிகவும் உத்ஸாஹமுண்டாயிற்று. ஸம்ஸ்க்ருதத்தில் விசேஷப் பயிற்சியில்லாதவர்களும் முகவிகாஸத்தோடு கேட்டுக்கொண்டிருந்தபடியால் மிகவும் களிப்படைந்தேன். முடிவில் ஹிந்தியிலும் ஸாராம்சத்தை விளக்கிச் சொல்லவேணுமென்று பலர் கேட்டுக்கொண்டதனால் அக்கோரிக்கையும் நிறைவேற்றப்பட்டது. இது சங்கர அகாடமியின் மூலமாக நடந்த நிகழ்ச்சி. அதைச் சேர்ந்த தலைவர்கள் ஸம்ஸ்க்ருதத்தில் வாசித்தளித்த ஸ்வாகதபத்திரமும் அடுத்தபடி அச்சிடப்பட்டுள்ளது.



மறுநாள் (21உ வெள்ளிக்கிழமை) காலையில் மோதிபாக் என்ற காலனியில் ஒரு பெரிய பள்ளியில் ஸம்ஸ்க்ருதம் பயிலும் மாணவ மாணவிகளுக்குப் பரிசு வழங்கவேணுமென்றும், அவர்களின் வளர்ச்சிக்கான நன்மொழிகள் கூறவேணுமென்றும் அழைத்துச் சென்றார்கள். டில்லிமாநகரில் இதுதான் கடைசியாக நடந்த உபந்யாஸம். ஒவ்வொரு நிகழ்ச்சியும் மனத்துக்கு மிகவும் ரம்மியமாகவிருந்தது. அன்றிரவே புறப்பட்டு இனிதாக ஸ்வஸ்தானம் சேர்ந்தாயிற்று. ... ... ... 





புது டில்லி பிர்லாமந்திரத்தில் கீதாபவனத்தில் ஸம்ஸ்க்ருதோபந் யாஸகெட்டமிது. இங்கே இரண்டு படங்களில் காணப்படும் பெரியார் ஸுப்ரீம் கோர்ட் ஜட்ஜ் என்று போற்றப்பட்டவர். இவரும் மற்றுள்ள பெரியார்களும் ஸம்ஸ்க்ருத பாஷையில் மிகச் சிறந்த அறிவாளிகளென்று கொண்டாடப் பட்டார்கள். இவர்கள் அளித்த (ஸம்ஸ்க்ருத) ஸ்வாகத பத்ரிகை பின்புறத்தில் காணத்தக்கது.

—•—

गते मार्चमासे देहलीनगरं गतानस्मान्प्रति सेयं पत्रिका ॥

पण्डितप्रकाण्डानां "प्रतिवादि भयङ्कर" इत्यनितरनिर्देश्यवैदुष्यप्रभावालङ्कृतनामधेयानां

श्री अन्नङ्गराचार्यस्वामिमहोदयानां

दिल्लीराजधान्यां पदार्पणोत्सवावसरे, शंकरअकादमीसदस्यैः सप्रश्रयं समर्पितः

# स्वागतवचन - प्रसूनाञ्जलिः

श्रीमद्रामानुजसिद्धान्तप्रचारधुरन्धराः! विद्वदग्रेसराः, अन्नङ्गराचार्यस्वामिनः! तत्रभवतां पदार्पणेन धन्येयं राजधानी, अपि च धन्याः स्मो वयमत्रत्याः पौराः ।

"न ह्यम्मयानि तीर्थानि न देवा मृच्छिलामयाः । ते पुनन्त्युरुकालेन दर्शनादेव साधवः ॥" इति श्रीमद्भागवतवचनानुसारेण श्रीमतां कटाक्षपातेन पुलकितसर्वगात्राः पवित्रीकृतान्तःकरणाः स्वागतवचनस्य स्थाने नमोवाकं ब्रूमः ।

अयि वेदसंरक्षणविचक्षणाः! 'वेदोऽखिलो धर्ममूल'मिति स्वप्रामाण्यमुद्घोषयन्त्याः सर्वधर्मप्रसवित्र्याः श्रुतिमातुः शुश्रूषणे बद्धपरिकराणामनाद्यविच्छिन्नपरम्पराप्राप्तवैदिकमार्गप्रवर्तनैकचतुराणां मूर्त्तिमद्वेदपुरुषवद् भासमानानां तत्रभवतां सान्निध्यमात्रेण समुत्तेजितेयं शङ्करअकादमीनाम्नी संस्था, वैदिकसंस्कृतेः उच्छिन्नप्रायाणां वेदशाखानां संरक्षणे च इतोऽप्यधिकतर जागरूका भविष्यतीति निश्चप्रचम्। महतां सङ्गमेन खलु एतादृश्यः संस्थाः स्वोद्दिष्टसन्मार्गप्रवर्त्तने जीवातुभूतां शेमुषीं सम्पादयन्ति । वेदसंरक्षणमेव स्वशरीरपोषणादपि मुख्यतरमिति दृढं विश्वसतां वयःप्रयुक्तं शैथिल्यमप्यविगणय्य रात्रिन्दिवं धर्मप्रचारं कुर्वतां भवतां कर्णपीयूषायिता भवतीयं वार्त्ता येयं शंकर अकादमी संस्थापि देशे तत्र तत्र वेदाध्ययनाध्यापनप्रयासमावहतीति । गुर्जरेषु सिनोरग्रामे अथर्वणशौनकशाखायाः, महाराष्ट्रे पञ्चवटीक्षेत्रे याजुषमैत्रायणीयशाखायाः, द्रविडभुवि शेषपर्यङ्कमलङ्कुर्वतो भगवतो रङ्गनाथस्य क्षेत्रे सामवेदीयजैमिनिशाखायाः, वङ्गदेशस्थे कालिघट्टनगरे सामवेदीयकौथुमशाखायाः, ऋग्वेदस्य शाकलशाखायाश्च पाठशालाः सञ्चालयन्तीयमकादमी, तत्र भवतां वैदिकवाङ्मयजयस्तम्भभूतानां स्वागतोपचारप्रसङ्ग इतरसंस्थाभ्य आत्मनो विशेषतरां योग्यतां सविनयमुपस्मारयति निजां धन्यतां च प्रचिकटयिषति ।

श्रीमन्तो धर्मधुरन्धराः! भारतदेशस्य सप्तमोक्षपुरीष्वन्यतमायां श्रीकाञ्च्यां तत्रभवतां सिंहासनस्यानतिदूर एव विराजमानानाम् अनन्तश्रीविभूषितानां श्रीकामकोटिपीठाधीश्वराणां श्रीशङ्कराचार्यश्रीचरणानामादेशानुसारेण, वेदवेदान्ताध्ययनाध्यापनयोः, कर्मभक्तिज्ञानमार्गाणां परस्पराविरोधेन प्रचारप्रवर्त्तने च बद्धादरेयमकादमी, सनातनधर्ममार्गानुसारिणः श्रुतिमातुः स्तनन्धयान् सर्वानपि मनीषिवर्गान् समानोदरप्रसूतानिव मानयन्ती वरीवर्त्ति । अत एव वेदमार्गोद्धारकेभ्यः तत्रभवद्भ्यः राष्ट्रपतिकृतां सम्भावनामात्मनि कृतां सम्भावनामिव विभाव्य मोमुदत इयं संस्था।

धर्मप्रवर्त्तना भीष्मव्रतपरायणाः वार्द्धक्यात् शान्तनवावतारभूताः श्री अन्नङ्गराचार्यस्वामिनः! भारतधर्माटवीसञ्चरणोद्युक्तानाम् अस्मादृशां शिशूनां मार्गदर्शनेन धर्मपितामहत्वमलङ्कुर्वन्तः चिरकालं जयन्तु भवन्त इति भक्तेष्टवरदायकः श्रीवरदराजो भूयो भूयः प्रार्थ्यते ।

वयं स्मः

शङ्कर अकादमी-सदस्याः

नई दिल्ली नगरम्

कीलक-मीन-शुक्ल-तृतीया, २०२६ वि० सं०

# ஸ்ரீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமிக்கு டில்லிமாநகரில் அமோக வரவேற்பு

(புதுடில்லி. A. ராமாநுஜாசாரியார், B.A.,)

ஜகதாசார்ய ஸிம்ஹாசனதிபதி ஸ்ரீ உ. வே. ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்ஸ்வாமி 1967-ல் ராஷ்டிரபதி சம்மானத்தால் கௌரவிக்கப்பட்டாரென்பது யாவருமறிந்ததே. சம்மானத்தை ராஷ்ட்ரபதியிடமிருந்து நேராக ஸ்வீகரிக்க இங்கு ஸ்வாமி எழுந்தருளுவார் என்று டில்லி ஆஸ்திக ஜனங்களும் முக்கியமாக ஸ்ரீவைஷ்ணவர்களும் எதிர்பார்த்திருந்தனர். ஆனுல் ஆரோக்யக் குறைவால் ஸ்வாமியின் டில்லி விஜயம் அப்போது தடைபட்டுவிட்டது. அச்சமயத்திலிருந்தே பக்தகோடிகள் எம்பெருமானிடம் "நம் ஸ்வாமிகள் எக்காரணத்தை யொட்டியாவது இங்கு எழுந்தருளவேணும்; அவருடைய ப்ரவசனங்களை நாமுங்கேட்டு உஜ்ஜீவிக்க வேண்டும்" என்று தினேதினே பிரார்த்தித்தனர். உத்தர ஸ்ரீரங்கம்போல் விளங்கும் விருந்தாவனத்தில் கோயில்கொண்டிருக்கும் ஸ்ரீ கோதா—ரங்கமன்னுரும் பகவத்—பாகவதர்களின் இச்சையைப் பூர்த்தி செய்ய ஸங்கல்பம் கொண்டார். அத்தேவஸ்தான அதிகாரிகள் ஸ்ரீ அண்ணங்கராசாரியருக்கு ஸ்ரீ கோதா—ரங்கமன்னுரின் பிரம்மோத்ஸவத்திற்கு விஜயம் செய்ய அழைப்புப் பத்திரம் அனுப்பினுர்கள். ஸ்வாமியும் அதை சிரஸாவகித்து தம் திருமேனி அசக்தியையும் பொருட்படுத்தாது வடதேச யாத்திரையைத் துடங்கினுர்.

ஸ்வாமிக்கு உத்தரபாரத பிரயாணம் புதிதன்று. இதுவரை 23 தடவை ஸ்ரீ வைஷ்ணவ குழாங்களுடன் யாத்திரையை நடத்தியுள்ளார். ஆனுல் பகவானின் ஆக்ஞைக்கிணங்க இந்த யாத்திரை தனிப் பெருமைவாய்ந்ததாயிற்று.

"பீதகவாடையுடைதாழப் பெருங்கார்மேகக் கன்றேபோல்
வீதியாரவருவானை விருந்தாவனத்தே கண்டோமே."

என்று கண்ணுரக் கண்டுகளிக்க ஸ்வாமி 5-ம் உத்ஸவம் விருந்தாவனமெழுந்தருளினுர். உத்ஸவத்தில் ஸ்வாமியின் அந்வயத்தினுல் எம்பெருமானுக்கு உண்டான ஒரு தனிப்பட்ட முகச்சோதியை சேவித்தவர்கள் பாக்யசாலிகள். அடியேன் டில்லியிலிருந்து நண்பர்களுடன் தீர்த்தவாரியன்றுதான் விருந்தாவனம் சென்று சேர பாக்கியம் பெற்றேன். அன்று சாயங்காலம் "மதுரா—விருந்தாவன க்ஷேத்திர மஹிமையை" வட இந்திய ஸ்ரீ வைஷ்ணவர்களின் வேண்டுகோளினுல் ஹிந்தியில் பரக்க உபன்யஸித்தார் ஸ்வாமி. இரவு திவ்ய தம்பதிகளிடம் விடைபெற்று ஹரித்வார—ரிஷிகேச யாத்திரையின் முதல் கட்டமாக பாரத தேசத்தின் ராஜதானிக்குப் பிரயாணமானுர்.

ஸ்வாமி அண்ணங்கராசார்யர் டில்லிக்கு விஜயம் செய்யப் போகிறுர் என்ற செய்தி தக்க விளம்பரங்கள் மூலம் நகரத்தின் எல்லா பாகங்களிலும் பரவிவிட்டது ஸ்ரீவைஷ்ணவ குழாங்கள் ஸ்வாமியின் வரவை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர். ஸ்வாமியின் டில்லி அலுவல்களுக்கு ஏற்பாடுசெய்த ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்த சபையைப்பற்றி ஒரு வார்த்தை. இச்சபை 25 வருஷங்களுக்கு முன்பு சில ஆஸ்திகப் பெரியோர்களால் ஆரம்பிக்கப்பட்டது.

பிரதிவருஷம் இந்த ஸ்தாபனம் ஆழ்வாராசாரியர்கள் திருவவதாரோத்ஸவங்களை நடத்தியும் அச்சமயம் வித்வான்களைக்கொண்டு உபன்யாஸங்களுக்கு ஏற்பாடு செய்தும் நம் இராமானுச தர்சனத்தை பிரசாரம் செய்துவருகிறது. இதன் நிர்வாஹஸ்தர்களாயிருந்த பெரியோர்களில் உலக விக்யாதிபெற்ற விக்ஞானி (வைகுண்டவாசி) டாக்டர் ஸர். K. S. கிருஷ்ணன், உயர்நீதிபதி ஸர். S. வரதாச்சாரியார், ஸ்ரீஉ.வே. C. S. பார்த்தசாரதி அய்யங்கார் இவர்களைக் குறிப்பிடலாம். தற்காலம் சபையின் தலைமை ஸ்தானத்தை அலங்கரிப்பவர் மைசூர் ப்ராந்தத்தைச் சேர்ந்த ப்ரபல என்ஜினியர் ஸ்ரீ உ. வே. P. V. S. அய்யங்கார் ஸ்வாமி. இவர் நம் ஸ்வாமியின் டில்லி விஜயத்திற்குச் செய்துகொடுத்த சௌகர்யங்களும் ஏற்பாடுகளும் எல்லோருடைய பாராட்டுக்குமுரித்தாகும். இங்கு எதிரே தம் திருக்குமாரரோடு காட்சி தருகின்ற ஷ P. V. S. அய்யங்கார், (வைகுண்டவாசி) ஸ்ரீ S. R. S. ராகவன் அவர்களின் தர்மபத்னி ராஜலக்ஷ்மி அம்மாள் முதலானோர், தாய்மார்களும் சகோதரிகளும் ஆழ்வார் பாசுரங்கள், பூர்வாசார்ய ஸ்தோத்திரபாடங்கள் இவைகளை அத்யயனம் செய்ய "கோதா சங்கம்" என்ற ஸ்தாபனத்தை நிறுவி 16 வருடமாக மிகச் சிறந்த முறையில் கார்யம் நடத்திவருகின்றனர். இக் கோதா சங்கத்தின் சார்பில் நம் ஸ்வாமியின் முதல் உபன்யாஸம் ஏற்பாடு செய்யப்பட்டது.



மார்ச்சு 16-ம் தேதி ஞாயிற்றுக்கிழமை காலை டில்லியின் ஒரு பெரிய காலனியான கரோல்பாக்கில் முதல் கூட்டம் நடந்தது. அதிகாலையிலிருந்தே ஸ்திரீகளும் புருஷர்களும் நூற்றுக்கணக்கில் உபன்யாஸப் பந்தலில் அமர்ந்திருந்தனர். பூர்ணகும்பத்துடன் ஸ்வாமிக்கு வரவேற்பளிக்கப்பட்டது. வேதகோஷம் ஒலிபரப்பியின்மூலம் நான்கு திசைகளிலும் பிரதிபலிக்க ஸ்வாமி கரகோஷத்திடையே ஆசனத்தில் அமர்ந்தார். ஸ்ரீமதி பத்மா பத்மநாபன் தனக்கேயுரிய இனிய குரலில் கடவுள் வணக்கப் பாசுரம் பாடினாள். டில்லி ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்த சபையின் கார்யதர்சி ஸ்வாமிக்கு ஸ்வாகதம் கூறினார். பிறகு ஸ்வாமி திருப்பாவையின் தனிப் பெருமையைப்பற்றி "கங்கையின் பிரவாஹமோ, காவிரிப்பெருக்கோ" என்னலாம்படி சொற்பொழிவாற்றினார். உபந்யாஸம் முடிந்த பிறகு ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்த சபையின் உப தலைவர்களில் ஒருவரான

ஸ்ரீ R. வெங்கடேசய்யங்கார் நாட்டுப் பெண்கள் ஸ்ரீ ராமாயண கீதம் பாட, கூட்டம் இனிது கலைந்தது.

## லக்ஷ்மிபாய் நகரில் மாபெருங்கூட்டம்.

16உ ஞாயிற்றுக்கிழமை மாலை டில்லியின் கவர்மெண்ட் காலனிகளில் ஒன்றான லக்ஷ்மிபாய் நகர் மதராஸ் ஸ்கூலில் ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்த சபை ஒரு மாபெருங் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்தது. மத்ய கவர்மெண்டில் மிக உயர்ந்த பதவி வகிக்கும் நூற்றுக்கணக்கான தென்னிந்திய ப்ரமுகர்கள் இக்கூட்டத்தை அலங்கரித்தனர். ஸ்வாமி அண்ணங்கராசாரியாருக்கு உயர்ந்த முறையில் வரவேற்பளிக்க ஆஸ்திக மேதாவிகளடங்கிய ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டிருந்தது. கமிட்டியார் ஸ்வாமிக்கு ஒரு ஸ்வாகத பத்திரம் வாசித்தளித்தனர். அது அடுத்த பக்கத்தில் வெளியிடப்படுகிறது.

பிறகு, ஸ்வாமி "உபய வேதாந்தம்" என்ற விஷயத்தைப்பற்றி அருமையான பிரவசனம் செய்தார். வேதத்தின் இரு காண்டங்களையும் விவரித்து திராவிட வேதமாகிய திருவாய்மொழியின் ஏற்றத்தைப் பல மேற்கோள்களுடன் அம்ருதவர்ஷமாக உபன்யஸித்தார். வேதத்தின் உட்பொருளைப்பற்றிய சொற்பொழிவு 'ந பூதோ ந பவிஷ்யதி' என்றிருந்தது. பெண்ணும் பேதையும் புரிந்துகொள்ளும்படி ஒரு கடினமான விஷயத்தை எளியநடையில் விளக்கியது அத்விதீயம் என்று கூடியிருந்த பலமேதாவிகள் ஒருமிடறாகப் பேசிக்கொண்டனர்.

அடுத்தநாள் திங்கட்கிழமை (17-3-69) பிற்பகல் Administrative Reforms Commission கார்யதரிசி ஸ்ரீ V. V. சாரியார், I.R.S. அவர்களும் அவர் தர்மபத்னியும் ஸ்வாமியை அவரிருப்பிடத்தில் விடைகொண்டு தெண்டனிட்டு கீதையில் சில சந்தேகங்களில் தெளிவு பெற்றுச் சென்றனர். அன்று சாயங்காலம் டில்லியின் பெரிய காலனியான ராமகிருஷ்ணபுரம் மதராஸி ஸ்கூலில் ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்த சபையின் சார்பில் ஒரு பெரிய கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பிரஸன்னமாயிருந்த பெரிய உத்யோகஸ்தர்களில் ஸ்ரீ ஜஸ்டிஸ் R.L. நரசிம்மனைக் குறிப்பிடலாம். இவர் சமஸ்கிருதத்தில் பிரகாண்ட பாண்டித்யம் படைத்தவர். பாட்னா ஹைகோர்ட் சீப் ஜட்ஜு பதவியை வகித்தவர். தற்காலம் டில்லியில் Law Commission Member ஆக இருக்கிறார்.

ஸ்வாமியின் இன்றைய உபன்யாஸ விஷயம் "ஸ்ரீ ராமாயண தத்துவம்." "படிகொண்ட கீர்த்தி இராமாயணமென்னும் பத்தி வெள்ளம்* குடிகொண்ட கோயில் ராமாநுசன்......என்ற திருவரங்கத்தமுதனார் பாசுரத்தை விளக்கி எம்பெருமானார் முதலான நம் பூர்வாசார்யர்கள் ஸ்ரீ ராமாயண காலக்ஷேபத்தைச் சிறந்த போதுபோக்காகக் கொண்டிருந்ததுபற்றியும் இராமபிரானின் 16 குணவிசேஷங்களை தெளிவுபடுத்தும் வால்மீகியின் காவ்யத்தின் ஆரம்பச் சீர்மையைப்பற்றியும் இராமபிரான் அவதார ரஹஸ்யம், வாலி வத சமாதானம் .....இப்படி பற்பல படலங்களைப்பற்றியும் வாசாமகோசரமாகச் சொற்பொழிவாற்றி ச்ரோதாக்களை ராமபக்தி பரவசராக்கின விநோதத்தை ஆயிரம் நாப் படைத்த ஆதிசேஷனாலும் பேச முடியாது.

உபன்யாஸ முடிவில் ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்த சபையின் சார்பில் ஸ்ரீ P. V. S. அய்யங்கார் ஸ்வாமிக்கு கரகோஷத்தினிடையே ஒரு பணமுடிப்பை சமர்ப்பித்தார்.

(இதன் தொடர்ச்சி பக்கம் 18 காண்க.)

ஸ்ரீ:

ஸ்ரீ ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி மஹாவித்வான் உ.வே. காஞ்சி ப்ரதிவாதிபயங்கரம்

# அண்ணங்கராசாரியர் ஸ்வாமி

## திருவடித்தாமரைகளில் டில்லி ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்த சபை சமர்ப்பிக்கும் ஸ்வாகத பத்திரம்.

**ஸ்ரீ ஸ்வாமின்!**

தில்லிமாநகர் ஆஸ்திக உலகத்திற்கு தேவரீர் புதியவரல்லீர்; இத்தலைநகருக்கு ஸ்வாமி 23-தடவை விஜயம்செய்து பல அரியபெரிய சொற்பொழிவுகளையாற்றி பக்தகோடிகளைப் பரவசப்படுத்தியுள்ளீர். 1951-ம் வருஷம் ஸ்வாமியினுடைய ஷஷ்டியப்தபூர்த்தி சென்னை முதலிய மற்ற பிராந்தங்களில்போல, இங்கும் அதிவிமரிசையாகப் பல நாட்கள் கொண்டாடப்பெற்று நடந்தது. அவை என்றும் மறக்கமுடியாத நிகழ்ச்சிகள்.

**ஸ்ரீ வைஷ்ணவ பரமாசாரியரே!**

பூர்வாசார்ய கோஷ்டியில் எம்பெருமானாருக்கு முன்னும்பின்னும் திருமுடி, திருவடி என்ற பங்க்திகளில் ஸ்ரீமந்நாதமுனிகள், ஆளவந்தார், எம்பார் ஆழ்வான், பட்டர், வேதாந்ததேசிகன், மணவாளமாமுனிகள்—இவர்கள் தங்கள் தங்கள் ஸ்ரீஸூக்திகள், வ்யாக்யான க்ரந்தங்கள், ப்ரவசனங்கள் இத்யாதி மூலம் விசிஷ்டாத்வைத சம்பிரதாய ஸ்தாபனார்த்தம் செய்திருக்கும் சேவைகள் எத்தனை! அவ்வாசார்ய ச்ரேஷ்டர்கள் யாவரும் ஸ்வாமியிடம் ஒருங்கே அவதரித்துள்ளார் என்றால் மிகையாகாது. நமது வைதிக மதத்திற்கு—குறிப்பாக ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்திற்கு—ஸ்வாமி ஆற்றியுள்ள பஹுமுகமான சேவை அத்விதீயம்.

**பண்டித உலகம் வியக்கும் வித்வத் ஸார்வபௌமரே!**

ஸம்ஸ்க்ருதம், தமிழ், தெலுங்கு, ஹிந்தி இந்நான்கு பாஷைகளிலும் ஸ்வாமி அடைந்துள்ள பாண்டித்ய உன்னதியை அளவிட நாங்கள் அர்ஹதையற்றவர்கள். இப்பாஷைகளில் ஸ்வாமி பிரசுரித்திருக்கும் வெளியீடுகள் 700-க்கு மேற்பட்டவை. அவைகளில் ஸ்வகீய க்ரந்தங்கள்தான் எத்தனை! ஸ்ரீ ராமாயண தண்டகம், ஸ்ரீ ராமபத்ர கர்ணாம்ருதம், கோவிந்த கீதாம்ருதம், கோபால பக்தாம்ருதம், ஸ்ரீ சைலேச பாதுகா ஸஹஸ்ரம் இத்யாதிகள் பண்டித பக்த உலகம் வியக்கும் உன்னத ஸாஹித்யங்களாகும்.

**ஆராய்ச்சியுலக திவாகரரே!**

வேதத்தின் ஆழ்பொருளை யறிந்த தேவரீருடைய வேதாத்யயன ஸர்வஸ்வம், வேதாந்த ஸர்வஸ்வம், தர்க்கசாஸ்திர ஸர்வஸ்வம் முதலான நூல்கள் வேதத்தைப் போலவே சாச்வத ஸாஹித்யங்களாகப் பரிமளிக்கின்றன. ஸ்வாமியின் ஆராய்ச்சி

க்ரந்தங்களில் சிகரம்போல் விளங்குவது "திரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம்" இந்த ச்ரேஷ்ட க்ருதியில் எம்பெருமானுருடைய ஸ்ரீ பாஷ்யமும், கீதாபாஷ்யமும் ஆழ்வார்கள் திவ்யப் பிரபந்தங்களையே ஆதாரமாகக்கொண்டது என்பதை நிலைநாட்டி அழியாப்புகழ் பெற்றுள்ளீர்.

## பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளுக்குப் புத்துயிரளித்த பரமபாகவதரே!

பூர்வாசார்ய கிரந்தங்கள் லுப்தமானவை போக மிகுதியையாவது நம் வரும் சந்ததியாருக்கு காப்பாற்றித்தர வேண்டுமென்ற லட்சியங்கொண்டு, ஸ்ரீ ராமானுஜர், நம்பிள்ளை பிள்ளைலோகாசாரியர் ஸ்ரீ வேதாந்த தேசிகன், ஸ்ரீ வரவரமுனிகள் இவ்வாசார்யர்களுடைய ஸகல க்ருதிகளையும் பல பதிப்புகள் பிரசுரித்து லோகோபகாரம் செய்துள்ளீர்! பல கமிட்டிகள் பல பண்டிதர்களின் ஒத்துழைப்பின் மூலம் பல வருடங்களில் செய்து முடிக்கக்கூடிய ஒரு பெரிய திட்டத்தை ஸ்வாமி ஒருவரே அநாயாஸமாக குறைந்த காலத்தில் பூர்த்தி செய்தது எவ்விதத்தில் நோக்கினாலும் ஒரு அமானுஷ்ய க்ருத்யமெனக் கருதத் தடையில்லை.

## வ்யாக்யான வாசஸ்பதியே!

நாலாயிர திவ்ய பிரபந்த பாசுரங்களுக்கும் நம் பூர்வாசார்ய ஸ்தோத்திரங்களுக்கும் ஸ்வாமி எளிய நடையில் க்ரந்த கர்த்தாக்களினபிப்ராயத்தை யொட்டியே இயற்றியிருக்கும் வ்யாக்யான க்ரந்தங்களை சேவித்தால் ஸ்வாமி "நவீன பெரியவாச்சான்பிள்ளை" என்ற விருதுக்கு எவ்வளவு பொருத்தமானவரென்று தெள்ளென விளங்கும்.

## தார்மிக பத்திரிகையுலகத்தில் விளங்கும் நடுநாயக பத்திரிகாதிபரே!

ஸ்வாமி சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, ஹிந்தி—இந்நான்கு பாஷைகளில் பல வருடங்களாக தொடர்ந்தாப்போல் பத்திரிகைகளை வெளியிட்டு தார்மிக பத்திரிகையுலகத்தில், தனி ஸ்தானத்தை வகுத்துக்கொண்டுள்ளீர்! இந்த ஸஞ்சிகைகளில் வேத, தர்ம சாஸ்திரங்களை கடைந்தெடுத்து ஆத்யாத்மிக ரஹஸ்ய ரத்னங்களை அள்ளிக் கொடுத்து வருகிறீர். இப்பத்திரிகைகளில் பிரசுரிக்கப்படும் விஷயதானங்கள் தனி இலக்கியங்களாகுமன்றோ?

## பிரதிவாதிபயங்கரரே!

ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தையும், பூர்வாசார்யர்களையும் தூஷணை செய்யும் குத்ருஷ்டிகளை பல வாத க்ரந்தங்களியற்றி வாய்திறக்கவொட்டாமல் செய்து "பிரதிவாதி பயங்கரம்" என்ற வம்ச விருதை ஸார்த்தகமாக்கிக்கொண்ட கௌரவம் பெற்றுள்ளீர். வாத-விவாத கேந்த்ரத்தில் ஸ்வாமியை ஸ்ரீ வேதாந்த தேசிகனோடு ஒப்பிடல் மிகப் பொருத்தமேயன்றோ?

## உபந்யாஸகர் திலகமே!

ஆஸ்திகர்களின் நன்மையைக் கருதி ஸ்வாமி செய்துவரும் தொண்டுகள் பலவாயினும் ப்ரவசனங்கள்மூலம் செய்துவரும் சேவை வாசாமகோசரம். பல நகரங்

களிலும் தமிழ், தெலுங்கு, ஸம்ஸ்கிருதம், ஹிந்தி இந்நான்கு பாஷைகளிலும் பல்லாயிரக் கணக்கான உபந்யாஸங்கள் செய்துவருகிறீர். ஸ்வாமி சொற்பொழிவாற்றும்போது வ்யாஸர், பராசரர், வால்மீகி முதலிய ஞானிகளை ஒரே வ்யக்திமூலம் கேட்கும் அதிசயத்தைக் காண்கிறோம். திவ்யப்ரபந்த பாசுரங்கள் ஸ்வாமியின் திருவாய் வழியாய் தாரை தாரையாகப் பொழிகின்றன. பூர்வாசார்ய ஸ்தோத்ர ரத்னங்கள் ஸ்வாமியின் ஜிஹ்வாவில் துள்ளிக்குதிக்கக் காண்கிறோம். என் சொல்லி என்? ஸ்வாமியினுடைய ப்ரவசன மஹிமையை ஆயிரம் நா படைத்த ஆதிசேஷனாலும் வர்ணிப்பது அரிதே.

**தர்சன ப்ரவர்த்தக ச்ரேஷ்டரே!**

தேவர் கைக்கொண்டுள்ள ஜீவிய லட்சியங்கள் பூர்ண வெற்றியடைய, பெருந்தேவி சமேத பேரருளாளன் எம்பெருமானருக்களித்ததுபோல 120 ஸம்வத்ஸர ஆயுளையும், த்ருடகாத்திரத்தையும் அருள்புரியவேண்டுமென்று ஹிருதயபூர்வமாகப் பிரார்த்திக்கிறோம்.

இப்படிக்கு,

புது டில்லி வரவேற்பு கமிட்டி அங்கத்தினர்.

Justice R. L. Narasimhan
K. S. Sundararajan
prof. K.V. Raghavachariar
P.N.Krishnaswami Iyengar
V. P. Narasimhan
T. D. Rangaramanujam
V. Srinivasa Iyer
P. S Srinivasan
Dr. G. Ramaswamy
R. Venkatesa Iyengar
Prof. S. Rangaswami Iyengar
A. K. Sundararajan
V. S. Rajan
P. Krishnaswamy
R. S. Ramanujam
A. Ramanujachari
P. V. S. Iyengar
R. T. Krishna Iyengar
A. S. Raghunathan
C. N. Rajagopal
T. K. S. Rangan
R. Kannan
Paravastur Srinivasan

சுபம்.

---

(பக்கம் 15-ன் தொடர்ச்சி)

டில்லி ஆஸ்திகர்கள்—முக்கியமாக நம் ஸ்வாமியின் வரவேற்புக் கமிட்டியங்கத்தினர் அன்புடனளித்த நன்கொடையைக்கொண்டே பணமுடிப்பு ஸமர்ப்பிக்கப்பட்டது. டில்லியில் மறுபடியும் இரண்டு நாட்களுக்கு உபந்யாஸ ஏற்பாடுகள் ஆகியிருந்தும் ஸ்வாமி திரும்பவும் எழுந்தருள்வதாகச் சொல்லி ஹரித்வாரப் பயணத்தில் ஊக்கங்கொண்டார். நாங்களும் சிலர் பின்தொடர்ந்தோம். ஸ்வாமி பல தடவை வதரி யாத்திரை சென்றவராதலால் அந்த யாத்திரைகளின் விசேஷச் செய்திகளை ஸாதித்துக்கொண்டே வந்தபடியால் விரைவில் வழிமாண்டுவிட்டது. ஹரித்வாரம் கிட்டிவிட்டது. அங்குள்ள ஆப்தர்கள் பலரும் ஸ்வாமியைக் கண்டதும் அடைந்த குதுகலம் மிகவும் வியக்கத்தக்கதாயிருந்தது. தபாலாபீஸ் சிப்பந்திகளுட்பட வரவேற்ற அதிசயம் வருணிக்கமுடியாதது.

இங்கு கங்கைக்கரையில் பல தருமசாலைகள் உண்டே; எதுவும் ஸ்வாமிக்குச் சொந்தமான இடம் போலவே காணப்பட்டது. பொத்தார் ஹவுஸ் என்கிற மிக விசாலமான தருமசாலையின் பரிபாலகரான, ஆயுர்வேத ரத்னம். பண்டித. ஸாகரதத்தசர்மா

என்பவர் ஸ்வாமியை வெகு கௌரவித்து தம்முடைய பங்களாவில் இருத்திக்கொண்டார். அந்த இடத்தில் வருஷக்கணக்காக வாஸஞ்செய்தாலும் த்ருப்தி பிறவாது.

அவ்வூர்க் கடைவீதியில் எவ்விதமான வண்டியும் போக்குவரத்து செய்யமுடியாது. ஆனாலும் ஸ்வாமி யெழுந்தருளியிருப்பதையறிந்த கடைவீதியார்—ஏற்கெனவே ஸ்வாமியின் சிபார்சு பத்திரங்களைக் கொண்டவர்கள் கடைவீதிவழியே வந்து மங்களாசாஸனம் செய்யவேண்டுமென்று நிர்ப்பந்தித்து அழைத்தபடியால் ஸ்வாமி மிக்க தளர்ச்சியுடன் மெதுவாக எழுந்தருளினார். ஸ்வாமியின் ஜன்மநக்ஷத்ர விசேஷம் ஸமீபித்திருந்தபடியால் பாராயணஸ்வாமிகளின் ஸன்மானத்திற்காக ஒவ்வொரு பெரிய கடையிலும் பட்டுகளும் சால்வைகளும் வாங்கினது ஏறக்குறைய ஆயிரம் ரூபாய்க்கு இருக்கும். அந்த மூட்டைகளைத் தலையால் சுமந்துவரும் பாக்கியம் உடன் சென்ற எங்களுக்குக் கிடைத்தது.

மறுநாள்காலை ரிஷீகேசயாத்திரை ஆரம்பமாயிற்று. போம்வழிகளின் அழகும் தூய்மையும் வருணிக்கமுடியாதது. 'இப்போது நாம் செல்லும்வழி அர்ச்சிராதிமார்க்கமன்றோ' என்று சொல்லிக்கொண்டே வந்தார் ஸ்வாமி. அர்ச்சிராதிமார்க்கமென்று ஒன்றிருப்பதாகக்கூட அறியாத நமக்கு அது எப்போது ப்ராப்தமாகுமோ தெரியாது, இப்போது அதை ப்ரத்யக்ஷமாக அநுபவிக்கிறோமே! என்று நாங்கள் சொல்லி மகிழ்ந்தோம். பதரிகாச்ரம மார்க்கத்தின் மகிமைகளையும் பல விருத்தாந்தங்களையும் ஸ்வாமி ஸாதிக்கக் கேட்டுக்கொண்டே வழிமாள்வது தெரியாமல் சென்றோம். லக்ஷ்மண ஜூலா வரையில் சென்று வதரியைத் திசைநோக்கி வணங்கிவிட்டுத் திரும்பினோம். திரும்புகையில் சிவானந்தாச்ரமத்தில் சில நாழிகைகள் தங்கினார் ஸ்வாமி. இவ்வாச்ரமமும் ஸ்வாமிக்குச் சொந்தமானவிடமன்றோ? இங்கு ஸ்ரீ சிவானந்தா அவர்கள் வாழ்ந்திருந்த காலத்தில் ஸ்வாமியின் உபந்யாஸங்களைப் பலமுறை நடப்பித்து வேதபாரங்கதரென்றும் வ்யாக்யானவாசஸ்பதியென்றும் விருதுகள் சூட்டினாரென்பது பிரசித்தமே. அங்கு தற்காலம் தலைவராக விளங்கும் ஸ்ரீ க்ருஷ்ணானந்தா அவர்களுக்கும் ஸ்வாமிக்கும் நடந்த ஸம்பாஷணைகள் கர்ணாம்ருதமாயிருந்தன. அங்கு ஓரிரவாவது தங்கவேணுமென்று எல்லார்க்கும் ஆசையிருந்தும் மறுபடியும் டில்லியில் புரோக்ராம் இருந்தபடியால் அன்றே ஹரித்வாரம் சேர்ந்து மறுநாளுதயம் டில்லிக்கு வந்து சேர்ந்தாயிற்று.

## தில்லி தமிழ்ச்சங்கத்தில் வரவேற்பு.

20-3-69 மாலை டில்லித் தமிழ்ச்சங்கம் ஸ்வாமிக்கு வரவேற்பளித்தது. உபதலைவர் ஸ்ரீ குப்புஸ்வாமியவர்கள் ஸ்வாமியின் திவ்யப்பிரபந்த திவ்யார்த்ததீபிகை யுரையின் சிறப்புகளை யெடுத்துரைத்து இவ்வுரைதான் ஆழ்வார் பிரபந்தங்களுக்கு அரியபெரிய திறவுகோலாய் விளங்குகின்றதென்று கூறி ஸ்வாமிக்கு மாலையணிவித்துச் சொற்பொழிவைப் பிரார்த்தித்ததும், ஸ்வாமி தமிழ்மொழியின் சிறப்பு தொன்மை இவற்றைப்பற்றி விளக்கம்தந்து, தமிழுக்கு முக்கியமாகச் சேவைபுரிந்த கம்பர், பிள்ளைப்பெருமாளையங்கார் ஆகிய இருவரின் சொல்நயங்களை யெடுத்துரைத்து மகிழ்வித்தார்.

## சங்கர அகாடமியில் ஸம்ஸ்க்ருத ப்ரவசனம்.

அப்போதே ஏழுமணியிலிருந்து பிர்லா லக்ஷ்மீநாராயண மந்திரத்தின் கீதாபவனுக்கு அழைத்துச் செல்லப்பட்டார் ஸ்வாமி. அங்கு Sankara Academy of Sanskrit Culture

and Arts என்ற ஸம்ஸ்கிருத இலக்கிய கலை ஸ்தாபனத்தின் சார்பில் ஏற்படுத்தப்பட்டிருக்குங்கூட்டத்தில் வேதஸம்ரக்ஷணம் என்னும் விஷயமாக ஸம்ஸ்க்ருதத்தில் பிரவசனம் செய்யக் கோரியிருந்தார்கள். ஸ்வாமிக்கு ஸம்ஸ்க்ருதந்தான் நிஜபாஷை யென்று அனைவரும் ஏககண்டமாகச் சொல்லும்படி பேசினார். ஸ்ரீ ஜஸ்டிஸ் V. ராமசாமியவர்கள் இக்கூட்டத்திற்குத் தலைமைதாங்கினார். அவர் அகாடமியின் சார்பில் ஸம்ஸ்க்ருதத்தில் ஸ்வாகதபத்திரமொன்று வாசித்தளித்துப் பொன்னாடை போர்த்தினார். தலைநகரிலுள்ள ஸம்ஸ்க்ருத வித்வான்கள் பலர் வந்திருந்தனர். அவர்களில் ஒரு மஹான் "டாக்டர் ராதாகிருஷ்ணனுடைய ஆங்கில சொற்பொழிவுபோல் ஸ்ரீ அண்ணங்கராசாரியாருடைய ஸம்ஸ்க்ருத ப்ரவசனம் கம்பீரமாயும் தட்டுத்தடுமாற்றமின்றி சரளமாயும் கேட்போர் மனத்தைக் கொள்ளைகொள்வதாயுமுள்ளது" என்று பேசினார். ஸ்வாமி தமது சொற்பொழிவில் வேதத்தின் பல பகுதிகளை விவரித்து, வேதம் கற்க உத்ஸாஹமளிக்க கவர்ன்மெண்டு முன்வர வேண்டுமென்று வற்புறுத்திக் கூறினார். கல்வி இலாகாவைச் சேர்ந்த ஸ்ரீ C. R. ஸ்வாமிநாதன் அவர்கள் ஸம்ஸ்க்ருதத்தில் வந்தனோபசாரம் கூற, ப்ருஹஸ்பதி. ஸ்ரீ உவே. வேதாந்தாசாரியார் வேதகனம் ஓத இன்றைய நிகழ்ச்சி இனிது முடிந்தது.



## மதராஸி பள்ளிகள்

தலைநகரில் வாழும் தென்னிந்தியக் குழந்தைகளின் படிப்புக்காக ஐந்து ஸ்கூல்கள் நடத்தப்பட்டு வருகின்றன. மோதிபாக்கில் ஸ்ரீமதி. ருக்மிணிஸம்பத்தென்பவரின் தலைமையில் ஒன்று நடக்கிறது. உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்த இம்மாது குழந்தைகள் வடமொழி பயின்றாலல்லது உண்மைக் கல்வியின் பயனை அநுபவிக்க இயலாதென்ற திடநம்பிக்கை கொண்டவர். பாரதீய வித்யாபவன் நடத்தும் ஸம்ஸ்கிருத பரீக்ஷைகளுக்குக் குழந்தைகளைத் தயார் செய்கிறார். இதில் தேறின குழந்தைகளுக்குச் சான்றிதழ்கள் வழங்கவும் நல்லுரை கூறவும் நம் ஸ்வாமியை வேண்டிக்கொள்ள, அதற்கிணங்கி 21—3—69 காலை அப்பள்ளிக்கெழுந்தருளிப் பரிசுகள் வழங்கி நல்லுரைகளுங் கூறினஸமயம் மிகப் பெரிய கோலாஹலமாகவிருந்தது. பிறகு ஸ்ரீ ஸௌம்யநாராயணன் சகோதரர்களால் அவர்களது க்ருஹத்தில் அளிக்கப்பட்ட மரியாதைகளைப் பெற்றுக்கொண்டார் ஸ்வாமி.

## வாஞெலியில் ஸ்வாமியின் உபந்யாஸம்.

பிறகு நம் ஸ்வாமி All India Radio ஆபீஸுக்கு அழைத்துச் செல்லப்பட்டார். வெளிநாடு தமிழ் யூனிட்டின் அதிகாரியான ஸ்ரீமதி தர்மாம்பாள் ஸ்வாமியை வரவேற்ருள். தலைமை ஆபீஸர் Director General Sri A. K. Sen அவர்களும் ஸ்வாமியோடு அளவளாவி மகிழ்ந்தார். இங்கு முன்கூட்டியே ஏற்பாடு செய்திருந்தபடி "ஸ்ரீராம நவமியின் மஹிமை" என்பதுபற்றிய ஸ்வாமியின் உபந்யாஸத்தை (15 நிமிஷம்) ரேடியோவில் பதிவு செய்தார்கள். அது March மாத முடிவில் உலகமெல்லாம் கேட்க வெளிவந்துவிட்டது. அன்றே ஸ்வாமி ஸ்வஸ்தானத்திற்குப் புறப்பட்டாயிற்று

## அடியேன் A. ராமாநுஜாசாரி செய்யும் விண்ணப்பம்.

நம் ஸ்வாமியோடு ஒரு பத்துநாள்களுக்கு மேலாக நிரந்தர ஸஹவாஸம் பெற பாக்கியம் பெற்றேன். 27—3—69 தேதி முதலாக காஞ்சியில் ஸ்ரீ ஸ்வாமி திருமாளிகையில் 10 நாள் நடைபெறவிருக்கும் அவதார நக்ஷத்ர மஹோத்ஸவத்தையும் கூடவே விடை கொண்டு ஸேவித்துவர விருப்பமிருந்தும் உத்யோக நிர்ப்பந்தத்தினுல் ஸ்வாமியோடுகூட புறப்படமுடியாமற் போயிற்று. அந்த வருத்தம் மனதில் பெரிதுமிருந்தபடியால் ப்ரணதார்த்திஹரரான தேவப்பெருமாள் அடியேனுடைய ஜனகபிதா திருநாடலங்கரித்தது வியாஜமாக விரைவில் காஞ்சிக்கு விடைகொள்ள நேர்ந்தது. ஸ்வாமியின் அவதார நக்ஷத்ர கோஷ்டிகளிலும் அந்வயித்துக் களிக்கப் பரமபாக்கியம் ஏற்பட்டது. அது ஸம்பந்தமான ஒரு முக்கிய நிகழ்ச்சியையும் அடியேனே எழுதி ஸமர்ப்பிக்கிறேன். அக்கட்டுரையையும் ஏற்றுப் பத்திரிகையில் பிரசுரிக்குமாறு பிரார்த்திக்கிறேன்.

முக்கியமாகவொன்று விஜ்ஞாபித்து முடிக்கிறேன். அடியேனுடைய ஜனகபிதா திருநாடலங்கரித்த செய்தியைக் கீழே விஜ்ஞாபித்தேன். அவர் ஏறக்குறைய இரண்டு மாதகாலம் திருமேனி பாங்கில்லாமல் சயனத்திலிருந்தார். பெரும்பாலும் ஞாபகசக்தியையுங்கூட இழந்திருந்தார். மாசி மாதத்திலேயே அவர் திருநாட்டுக்கெழுந்தருளியிருக்க வேண்டும். அப்படி நேர்ந்திருந்தால் ப்ருந்தாவனம் டில்லி ஹரித்வார ஹ்ருஷீகேசங்களில் நம் ஸ்வாமியை அனுவர்த்திக்கவும், காஞ்சீபுரத்தில் வந்து திருநக்ஷத்ரோத்ஸவ வைபவங்களை அநுபவிக்கவும் பாக்கியம் நேர்ந்திருக்கவேமாட்டாது. அடியேனுடைய ஜனகபிதா நம் ஸ்வாமியை உயிராகவே கொண்டிருந்ததனுல் அது விளங்கவே தெய்வச் செயல் அமைந்ததென்று உள்ளம் பூரித்திருக்கிறேன். ... ...

# காஞ்சீ ப்ர. ப. அண்ணங்கராச்சாரியர் ஸ்வாமி 78-வது திருநக்ஷத்ரபூர்த்தி யுத்ஸவம்.

## நீதிபதி. உயர்திரு. A. அழகிரிசாமியவர்களின் புகழுரை.

ஸ்ரீ உ. வே. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி 1951-ல் சென்னை, டில்லி முதலிய மாநகர்களில் பல நாட்கள் விசேஷமாகக் கொண்டாடப்பட்டதென்பது உலகறிந்ததே. அவ்வருஷத்திலிருந்து ஒவ்வோராண்டும் திருநக்ஷத்ரபூர்த்தி உத்ஸவம் பத்து நாட்கள் காஞ்சியில் நடந்து வருவது ஸுப்ரஸித்தம். சிலவாண்டுகள் 18, 27 நாட்களும் கொண்டாடப்பட்டதுண்டு. இவ்வாண்டு ஸ்ரீ ஸ்வாமியின் 78-வது திருநக்ஷத்ரபூர்த்தி விழா பங்குனி மீ 14உ (27-3-69) புனர்வஸு முதல் 23உ (5-4-69) திருவிசாகம் வரையில் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. காலையிலும் மாலையிலும் ஸ்ரீ பேரருளாளன் பெருந்தேவித் தாயார் ஸந்நிதியில் மாட வீதிகளில் யஜுர், ஸாமவேத பாராயண கோஷ்டிகள் திருவீதி வலம் வருதல், ஸ்வாமி திருமாளிகையில் வேதபாராயணம், திவ்யப்ரபந்த ஸேவை, ஸ்தோத்ரபாட—ரஹஸ்ய க்ரந்தாநு ஸந்தானம், ஸ்ரீ ஸ்வாமியின் உபந்யாஸம் என்னும் க்ரமத்தில் ப்ரதிதின அநுஸந்தானங்களமைந்தன. பற்பல திவ்ய தேசங்களினின்றும் அத்யாபகர்களும், வேத வித்துக்களும், வித்வான்களும் நூறு திருநாமங்கட்குக் குறைவின்றி எழுந்தருளியிருந்து கோஷ்டியை அலங்கரித்தனர். அந்த கோஷ்டியின் கண் ஸ்ரீ ஸ்வாமி நாயகமணியென ஒளிர்ந்தார். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி காஞ்சி வாதிகேஸரி அழகிய மணவாள யதீந்த்ர ப்ரவண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகளும் ஸ்ரீ பெரும்பூதூர் யதிராஜ ஜீயர் மடாதிபதி பேரருளான ராமானுஜ ஜீயர் ஸ்வாமிகளும் ஒவ்வொரு வேளையும் கோஷ்டியில் அந்வயித்து ஸ்வாமிக்கு மங்களாசாஸனம் செய்தது ஒரு விசேஷம். இவ்வைபவத்தில் ஸ்மார்த்த கனபாடிகளும கலை வேறுபாடின்றி ஸ்ரீ வைஷ்ணவ ஸ்வாமிகளும் கலந்து கொண்டு உத்ஸவத்தைச் சோபிக்கச் செய்ததூஉங் கருதற்பாலது.

### ஸ்ரீ வைஷ்ணவ ஸர்வஸ்வம்

ஸ்வாமியின் அவதாரோத்ஸவத்தையொட்டி ஆண்டுதோறும் பங்குனி விசாக மலர் என்னும் 'ஸ்ரீ ராமாநுஜன்' விசேஷ வெளியீடு பிரசுரிக்கப்படுவது வழக்கம். அம் முறையில் இவ்வாண்டிலும் "ஸ்ரீ வைஷ்ணவ ஸர்வஸ்வம்" எனும் பெயர் புனைந்த விசேஷ மலர் 4-4-69 வெள்ளிக்கிழமை மாலை தனி ஸதஸ்ஸில் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி உயர்திரு. A. அழகிரிசாமியவர்கள் தலைமையில் அரங்கேற்றப்பட்டது. அவ்வமயம் சென்னையிலிருந்து ஸத்காலக்ஷேப சபைத் தலைவர் அட்வகேட் ஸ்ரீ உ. வே. V. ராஜகோபாலாசாரியாரும், அட்வகேட்கள் ஸ்ரீ உ. வே. வேங்கடவரதாச்சாரியர், ஸ்ரீ உ. வே. T. C. A. அனந்தாழ்வான் ஐயங்கார், ஸ்ரீ தேவராஜ ஸ்வாமி தேவஸ்தான

எக்ஸிக்யூடிவ் ட்ரஸ்டி ப்ரஹ்மஸ்ரீ P. K. வைத்யநாதய்யர் முதலான பல ப்ரமுகர்களும் விஜயம் செய்திருந்தனர். விசேஷ அலங்காரப் பந்தலில் ஏற்படுத்தப்பட்ட இக் கூட்டத்திற்குக் காஞ்சீ வாஸிகளும் ஏராளமாகப் போந்து மகிழ்ந்தனர்.

அரங்கேற்ற விழாவை ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி வாதிகேஸரி அழகிய மணவாள ஜீயர் ஸ்வாமிகளும் ஸ்ரீமத் பரமஹம்ஸ பேரருளாள ஜீயர் ஸ்வாமிகளும் தொடங்கி யருளினர். ஸ்ரீ அண்ணங்கராச்சாரியர் கனம் நீதிபதி அழகிரிசாமியவர்களின் மேன்மை, எளிமை, ஸம்ப்ரதாய விஷயங்களில் ஆழ்ந்த ஞானம் இவைகளைப் பாராட்டி மாலையிட்டுக் காஞ்சி வாஸிகளின் சார்பில் வரவேற்றார். அன்று வெளியிடும் ஸ்ரீ வைஷ்ணவ ஸர்வஸ் வத்தைக் குறித்து "இம்மலரைப் பல காரணங்களால் பூர்த்தியாகப் பிரசுரிக்கமுடியவில்லை. ஆனால் ஸ்ரீ தேவப்பெருமாளின் வைசாகோத்ஸவத்தையொட்டி வெளியிடப்போகும் "ஸ்ரீ வைஷ்ணவ சிந்தாமணி" என்ற மலரால் இக்குறை நீங்கும்; ஸ்ரீ வைஷ்ணவ உலகுக்கு இவ்விரு நூல்களும் மிகப் பயன்படுமென்று நம்புகிறேன்" என்றார் ஸ்வாமி. பின்பு ஆந்திர ஆஸ்திகர்களின் சார்பில் ஹைதராபாதிலிருந்து இதற்கென்றே வந்திருந்த ஸ்ரீமத் K. கிருஷ்ணமாசார்யரவர்களால் ஓர் அபிநந்தன பத்திரிகை வாசித்து ஸமர்ப்பிக்கப் பட்டது. அது ஒரு விசித்திர கவித்வமாம்.

பின்பு கனம் ஜட்ஜு ஸ்ரீ A. அழகிரிசாமி அவர்கள் "ஸ்ரீ வைஷ்ணவ ஸர்வஸ்வம்" மலரை அரங்கேற்ற எழுந்து ஸ்ரீ ஸ்வாமிக்குத் தமது அஞ்சலியை ஸமர்ப்பித்து, அவருடைய அத்விதீய வித்வத்து, ஸ்ரீ வைஷ்ணவ உலகில் தமக்கென ஏற்பட்டுள்ள தனிஸ்தானம் மற்றும் குணாதிசயங்கள்—ஆகிய இவற்றைக் குறித்துப் புகழுரையாற்றினர். அச்சொற்பொழிவின் சுருக்கம் வருமாறு:

"சில மாதங்களுக்குமுன்பு சென்னை பைஸானி மாதவ செட்டி சாரிடியின் சார்பில் நடந்த ஒரு ஸதஸ்ஸில்தான் முதன்முதல் ஸ்ரீ ஸ்வாமிகளின் சொற்பொழிவைக் கேட்கும் நற்பேறு வாய்த்தது. அன்று கேட்ட அவ்வளவு விஷயங்களைப் பற்பல நூற்களைப் பன்னாள் பயின்றாலும் தெரிந்துணரலரிது. அருளிச்செயல், உபநிஷத்துக்கள், வ்யாகரணம், பண்டைத் தமிழிலக்கியங்கள், ஸம்ஸ்க்ருத ஸாஹித்யங்கள், ரஹஸ்யக்ரந்த சூத்திரங்கள் எனுமிவை இடைவிரவிக்கோத்த ஸ்ரீ ஸ்வாமிகளின் உபந்யாஸமாலை பன்மணிகள் அணி செயும் நன்மாலையனையது. மடைதிறந்தாற்போல் உபந்யாஸம் அமைந்தது. அம் முதல் உபந்யாஸத்தைக் கேட்டனுபவித்ததிலிருந்தே சென்னையில் ஸ்வாமியின் உபந்யாஸம் எங்கு நடந்தாலும் பெரும்பாலும் கேட்கச் செல்வேன். அடியேன் ஸ்ரீ வைஷ்ணவ குலத்தில் பிறந்திருந்தாலும் "dilettante" என்று ஆங்கிலத்தில் சொல்வதுபோல் ஸ்ரீ வைஷ்ணவ க்ரந்தங்களில் ஆழ்ந்த ஞானம் உடையேனல்லேன். சென்னை ஸர்வகலாசாலை (Madras University) வெளியிட்ட ஈட்டின் தமிழாக்கத்தை ஸ்ரீ புருஷோத்தம நாயடுவின் உதவியால் பார்க்க நேர்ந்தது. அதை நன்கு படித்தனுபவிக்க அவாவுண்டாயிற்று. ஆனால் ஸத்க்ரந்தங்களை நன்கு தெரிந்துகொள்ள வடமொழியறிவு அவசியம். நண்பர் ஸ்ரீ C சுப்ரமண்யம் ஸ்ரீ வரதராஜுலு நாயுடு முதலியோர் 50 வயது கடந்த பின்பே வடமொழியினைக் கற்கத் தொடங்கி அதில் தேர்ச்சி பெற்றுள்ளனர். நானும் ஸம்ஸ்க்ருதம் கற்க முயன்று ஓரளவு தேர்ந்துளேன். புதுமொழியைக் கற்க வயது

ஒரு தடங்கலாகாது. ஆர்வமிருப்பின் எவ்வயதிலும் புதுமொழியைக் கற்றல் இயலக்கூடியதொன்றேயாம். ஸ்ரீ ஸ்வாமியின் கல்வியறிவு கடல்போன்றது. இப்போதும் படிப்பதை விட்டிலர் ஸ்வாமி. சிறு வயதில் கற்றவற்றைக் கருத்தில் தேக்கிக்கொண்டிருக்கும் இவரது நினைவாற்றல் வியத்தற்குரியது. சோம்பல் என்பதே ஸ்வாமியின் அகராதியிற் கிடையாது. நாள் முழுதும் ஏதோ படிப்பார்; எழுதுவார்; ஒரு வினாடியேனும் வீணுக்குவதில்லை. இந்த "எழுபத்தெட்டு வயது இளைஞருக்கு" இவ்வளவு சக்தி எங்கிருந்து வருகிறதென்று யான் வியப்புறுகின்றேன். பொருளல்லாவடியேனை இவ்விசேஷ விழாவிற்கு வரும்படியிட்ட கட்டளையைச் சிரமேற்கொண்டு பரிபாலனம் செய்யத் துணிந்தேன். பெரியாழ்வார் பெருமாள் பாலிருந்த அளவுகடந்ததோரன்பினால் "பல்லாண்டு பல்லாண்டெ"ன்று மங்களாசாஸனம் செய்ததை மனத்திற்கொண்டும், ஸ்ரீ மணவாளமாமுனிக்கு நாம் தினம் சொல்வது போன்றும் நம் ஸ்வாமி அண்ணங்கராச்சாரியர் "இன்னுமொரு நூற்றாண்டிருக்க வேணு"மென்று பகவானை ப்ரார்த்திக்கிறேன். இன்று வெளியிடும் "ஸ்ரீ வைஷ்ணவ ஸர்வஸ்வம்" பலவிதத்திலும் மேன்மைவாய்ந்தது. ஸர்வஸ்வம் என்பதை ஆங்கிலத்தில் "encyclopaedia" என்பர். ஸ்ரீ வைஷ்ணவ சிந்தாமணி வெளிவந்ததும் அதையும் படித்துப் பயனடைவோமாக, புத்தகம் ஸர்வஸ்வமாயிருப்பது ஓர்புறமாக, நம் ஸ்வாமி உண்மையாகவே ஒரு நடமாடும் கலைக் களஞ்சியம் (**Walking encyclopaedia**) (கரகோஷம்) இவ்விழாவில் கலந்துகொள்ளும் பாக்கியத்தையளித்த ஸ்வாமிக்கு யான் என்றும் கடப்பாடுடையேன்.

மேற்கூறியவாறு கனம் நீதிபதியவர்கள் உரையாற்றியதும் ஸ்ரீ V. ராஜகோபாலாச்சாரியார், நம் ஸ்வாமியின் பாண்டித்யத்தின் மேன்மையைப் புகழ்ந்து அதை 'அலாதி' என்றும், எப்படி ராம ராவணயுத்தம், சமுத்திரம் முதலியவைகட்கு அவையே உவமையாகின்றனவோ அங்ஙனமே ஸ்வாமியின் கல்வித் திறமைக்கும் ஸ்வாமி இயற்றிய க்ரந்தங்களுக்கும் அவைகளே ஒப்பாகும். நாம் ஆழ்வார்களையும் ஆசார்யர்களையும் நேரிற் சேவிக்கும் பேறுபெற்றிலோம். இருப்பினும் அவர்கள் எப்படியிருந்திருப்பரென்று ஸ்வாமியை ஸேவிப்பார் ஒருவாறு ஊகிக்கலாம். ஸ்வாமி திருவவதரித்திருக்கும் இக்காலத்திற்பிறந்த நாம் உண்மையில் அத்ருஷ்டசாலிகளே. நாமும் கனம் ஜட்ஜுடன் சேர்ந்து ஸ்ரீ அண்ணங்கராச்சாரியரை 'இன்னுமொரு நூற்றாண்டிரும்' என்று வாழ்த்துவமாக என்றார் V. ராஜகோபாலாச்சாரியார்.

பிறகு, ஸ்ரீமத் பரமஹம்ஸ பேரருளாள ஜீயர் ஸ்வாமிகள் கனம் நீதிபதிகளின் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய நுண்ணறிவைப் பாராட்டி எதிர்காலத்தில் அவருடைய தொண்டு நம் ராமாநுஜ தர்சனத்திற்கு மிகவும் பயனுமென்று மங்களாசாஸனம் செய்தருளினர்.

வந்தனோபசாரத்திற்குப் பிறகு யாவரும் ஒன்று சேர்ந்து "பொலிக பொலிக பொலிக" என்ற திருவாய்மொழிப் பாசுரங்களை மிகவினிய இசையுடனே யநுஸந்தித்தபின் அரங்கேற்ற விழா இனிது முற்றுப்பெற்றது. ... ... ... *

இப்படிக்கு, **A. ராமாநுஜாசாரி, B.A.**

# திருவல்லிக்கேணி ஸ்ரீ வேதவேதாந்தவர்த்திநி நூற்றுண்டு விழா.

**(ஸ்ரீமான் V. V. ராமாநுஜம், P H D. திருவல்லிக்கேணி வர்த்தினியின் நிர்வாஹக் கமிட்டி மெம்பர்.)**

திருவல்லிக்கேணி ஸ்ரீ வேதவேதாந்த வர்த்தினியின் சதாப்தி மஹோத்ஸவம் சென்ற பிப்ரவரி 24-ம் தேதி முதல் மார்ச் 9-ம் தேதிவரை விமரிசையாகக் கொண்டாடப் பட்டது. 24—2—69 அன்றைய ஸாயங்காலம் சென்னை அட்வகேட் ஸ்ரீ உ.வே. V. ராஜகோபாலாச்சாரியர் ஸ்வாமியால் திருவல்லிக்கேணி வானமாமலை மடத்தில் இந்த விழா தொடங்கி வைக்கப்பட்டது. அன்றையதினம் ஸ்ரீ உ.வே. காரப்பங்காடு வெங்கடாச்சாரியர் ஸ்வாமி ஆனந்தமயாதிகரணம் விஷயமாக உபன்யஸித்தார். 40 அல்லது 50 வருஷங்களுக்கு முன்பு இந்த ஸபை யௌவனமாக இருந்தபோது நமது தர்சனத்தில் ஸிம்ஹங்களாக இருந்த பல வித்வான்கள் இந்த ஸபையில் பரீக்ஷகர்களாகவும், உபன்யாஸகர்களாகவும் அன்வயித்திருந்ததையும், பல ப்ரபல வித்வான்கள் இந்த ஸபையில் பரீக்ஷை கொடுத்து பரிசு பெற்றதையும் குறிப்பிட்டு, வாக்யார்த்தமுறை, பங்க்தியடைவே காலக்ஷேபம் சொல்வது. இவை மறைந்து வருவதும், கேவலம் உபன்யாஸமுறை மட்டுமே ப்ரவசனத்துக்குக் கையாளப்படுவதும் நம் தர்சன வளர்ச்சிக்கு உகந்தவையல்ல என்பதையும் குறிப்பிட்டு, பழைய முறைகள் வர்த்தினியால் வளர்க்கப்படவேண்டியது அவச்யம் என்று ஸ்வாமி ஸாதித்தார்.

ஒவ்வொரு தினமும் வேதாந்தம், ரஹஸ்யம் இந்த ப்ரஸ்தானங்களில் ஒன்றும், அருளிச்செயலில் ஒன்றுமாக இரண்டு உபன்யாஸங்களாக 24-2-69 முதல் நடைபெற்றன. மைஸூர் ப்ராந்தம், திருப்பதி, ஸ்ரீரங்கம் மற்றும் முக்யமான திவ்யதேசங்களிலிருந்தும் ப்ரபல வித்வான்கள் இந்த விழாவில் உபன்யாஸங்கள் ஸாதிக்க எழுந்தருளினர். எல்லா உபன்யாஸங்களையும் பெருங்குழாமாய் அடியார்கள் கேட்டு மகிழ்ந்தனர். ஸ்ரீ பாஷ்யம், கீதாபாஷ்யம், வேதார்த்த ஸங்க்ரஹம், ஸ்ரீ வசனபூஷணம், ஆசார்யஹ்ருதயம் இவைகளில் 13 விஷயங்களும், பகவத் விஷயத்தில் 10 விஷயங்களும் இதர அருளிச்செயல்களில் மீதமுமாக உபன்யாஸங்களுக்கு விஷயமாக அமைந்தன.

மார்ச் மாதம் 1-ம் தேதி ஸ்ரீ ராமாநுஜ பத்ராதிபர் ஸ்ரீ உ.வே. P. B. A. ஸ்வாமி உபன்யாஸ கோஷ்டிக்கு எழுந்தருளியிருந்தது ஒரு ஸுக்ருத விசேஷமாய் அமைந் திருந்தது. அன்றையதினம் ஸ்ரீ உ.வே. அக்காரக்கனி ஸம்பத்குமாராச்சாரியர் ஸ்வாமி (ஸ்ரீ ஸ்வாமியின் ஜ்யேஷ்ட ஜாமாதா) கீதா பாஷ்யம் விஷயமாகவும் ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம் பத்ராதிபர் ஸ்ரீ உ.வே. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி 'கங்குலும் பகலும்' விஷயமாகவும் உபன்யஸித்தனர். பிறகு ப்ரதிவாதிபயங்கரம் ஸ்வாமி திருவிருத் தத்தில் ''இறையோ இரக்கினும் ஈங்கோர் பெண்பால்......அரவணைமேல் பள்ளிகொண்ட முகில்வண்ணனே'' என்னும் பாசுரத்தில் 'கங்குலும் பகலும்' திருவாய்மொழி விஷயத்தை ஸாரமாக அநுபவிக்கும்படியை விவரித்தருளினர்.

28—2—69 முதல் யதுகிரி எதிராஜ ஜீயர் மடத்தில் காலை இரவு இரண்டுவேளையும் திவ்யப்ரபந்த ஸேவையும் பிற்பகலில் யஜுர்வேத ஸாமவேத பாராயணமும் நடந்து

9—3—69 காலை சாற்றுமுறையாயிற்று. அன்றையதினம் காலை 8 முதல் 9 மணி வரை ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி ஸன்னிதி பரிகரங்களான யானை குதிரை, வாத்யங்கள், சத்ரசரமராதிகளுடனும் கோஷ்டியார் ஸ்தோத்ரபாட ஸேவையுடன் திருவீதிவலம் வந்து 9 மணிக்குமேல் சாற்றுமறையாயிற்று. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி காஞ்சீ அழகிய மணவாள ஜீயர் ஸ்வாமியும் ஸ்ரீபெரும்பூதூர் எம்பார் ஜீயர் ஸ்வாமியும் கோஷ்டியை அலங்கரித்தது பரம விலக்ஷணமாய் அமைந்தது.

2—3—69 ஞாயிற்றுக்கிழமையன்று; ஸ்ரீ உ.வே. காரப்பங்காடு ஸ்வாமி தலைமையில் வாக்யார்த்த ஸதஸ் நடந்தது; ஸ்ரீ உ.வே. கோ. க. அப்பன் ராமாநுஜாசாரியர் ஸ்வாமி, பிள்ளை லோகம் ஸ்தலசயனத்துறைவார் ஸ்வாமி, திருநாராயணபுரம் ஆழ்வார் லக்ஷ்மி தாதாசாரியர் ஸ்வாமி, அரையர் ஸ்ரீராமய்யங்கார் ஸ்வாமி, இவர்கள் வாக்யார்த்தமுறையில், "முமுக்ஷுவுக்கு கர்மாநுஷ்டானம் அவச்யமா? கர்மாநுஷ்டானம் மோக்ஷோபயோகியா? ஞானயோக பூர்வகமாகமட்டும் வேண்டியதா?" என்னும் விஷயங்களை பூர்வபக்ஷ ஸித்தாந்தரூபமாக விவாதித்தனர்.

9—3—69 அன்று நூற்றுவது வர்ஷ உத்ஸவம் மஹாவித்வான் ஸ்ரீ உ.வே. காஞ்சீ. ப்ர. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி தலைமையில் ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி ஸன்னிதியில் திருவாய்மொழி மண்டபத்தில் நடைபெற்றது. வர்த்தினி பாடசாலை வித்யார்த்திகள் யஜுர்வேத, ஸாமவேத பஞ்சாதிகள் சிலவற்றை ஓதினர். அப்படியே அருளிச்செயலிலும் ஸ்தோத்ரபாடங்களிலும் சில பாகங்கள் அநுஸந்தானமான பிறகு ஸ்வாமி வித்யார்த்தி களுக்கும் உபாத்யார்களுக்கும் பரிசு பஹுமானங்கள் வழங்கினார். பிறகு 'வேதத்தை வேதத்தின் சுவைப்பயனை' என்ற தலைப்பில் உபன்யாஸம் ஸாதித்தார். ஸ்வாமி, வர்த்தினியில் பலவாண்டுகளுக்குமுன்பு தாமே பரீக்ஷை கொடுத்தது, பிறகு பரீக்ஷகராகவும் உபன்யாஸகராகவும் ஸேவை செய்தது, அவிச்சின்னமாக ஸுமார் 35 வருஷங்களாக அத்யக்ஷராக வர்ஷ உத்ஸவத்தில் இருந்து உபன்யாஸம் ஸாதிப்பதுமாய் தமக்கு வர்த்தினி யிடமுள்ள தொடர்பை மிக மகிழ்வுடன் தெரிவித்தார். இப்படி அவிச்சின்னமான ஸம்பந்தம் வர்த்தினிக்கு ஒரு தனிப் பெருமை. ப்ரஸங்காத். குன்றபாக்கம் சீமாச்சார் ஸ்வாமி ஒரு ஸமயம் பரீக்ஷகராக இருந்து ஸம்பாவனை பண்ணிய க்ரமத்தை ஸ்வாமி ஸாதித்ததை மிகவும் ரஸிக்கும்படியாய் இருந்தது. பரீக்ஷையில் விலக்ஷண ஞானம் படைத்தவருடன், அறியாதவர்களும் கலந்துகொள்வர்களாம். பின்சொன்னவருக்கும் ஏதாவது உபகரிக்கவேண்டுமென்பது பரீக்ஷகஸ்வாமி திருவுள்ளமாம். ஒருஸமயம் இவர்களில் ஒருவருக்கு 'அஜ்ஞானம்' என்று பிருது அளித்து 25 ரூபாய் ஸன்மானமும் இன்னொருவருக்கு 'அன்யதாஞானம்' என்று பிருது அளித்து 15 ரூபாய் ஸன்மானமும் சிபாரிசு பண்ணினாராம். அன்யதாஞானத்தைவிட அஜ்ஞானமே தேவலை என்பதை ஸ்வாமி காட்டியதை எல்லாரும் போற்றும்படி இருந்ததாம்!

இந்த விழாவின் ஞாபகமாக மலர் வெளியீடு ஏற்பாடாகிவருகிறது. இதில் சதாப்தி உத்ஸவத்தில் ஸாதிக்கப்பட்ட உபன்யாஸங்களை வெளியிட ஏற்பாடாகிவருகிறது.

சென்னை வானொலி நிலயத்தார் சாற்றுமுறையன்று ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி ஸன்னிதியில் நடந்த வைபவங்களை ஒலிப்பதிவுசெய்து அதில் சில பாகங்களை 12—3—69 அன்று இரவு ஒலிபரப்பினர். ... ... ... ...



# அகரம் அனந்தாசார்ய ஸ்வாமியின் வியோகம்.

காஞ்சீபுரத்திற்குத் திலகமாக எழுந்தருளியிருந்தவர் இந்த ஸ்வாமி. தென்னேரி யகரத்தில் அவதரித்து, இளமையில் ஸ்ரீபெரும்பூதூரில் கலாசாலையில் திவ்யப்ரபந்தங் களையும் உபயுக்த வேதங்களையும் ஸாஹித்ய காவ்ய நாடகாதிகளையும் அதிகரித்து ரஹஸ்ய பகவத் விஷயாதிகளை தகுந்த ஆசாரியர்களிடம் ஸேவித்து, வைதிக கர்மகலாபங்களில் நுட்பமான விஷயங்களுக்கு பஹுச்ருதராயிருந்துவந்தார். நாற்பது திருநக்ஷத்ரங்களுக்கு மேல் காஞ்சீபுரியிலேயே நிவாஸமாக இருந்துவந்தார். தேவப்பெருமாள் ஐம்பது வருஷ காலமாக மாசி மாதத்தில் தென்னேரியகர மஹோத்ஸவம் கண்டருளிவருவதற்கு இந்த ஸ்வாமியே மூலகாரணமானவர் என்று சொல்லலாம். பகவத் பாகவத ஆசார்ய பரிசர்யை களில் ச்ரத்தாபக்தியுடன் ஓய்வின்றி கிஞ்சித்கரித்துவந்த பெருமை இவர்க்கு அஸாதாரண மானது. தலைவலியென்றோ வயிற்றுநோய் என்றோ ஒருநாளும் அஸ்வஸ்தை கொள்ளாம லிருந்தார். எப்படிப்பட்டவர்களையும் எம்பெருமான் தன்னடி சேர்த்துக் கொள்பவ னாதலால் சென்ற பங்குனிமீ 12-ஆம் தேதியன்று எம்பெருமான் இப்பெரியாரைத் தன்னடிச் சோதிக்கு அழைத்துக்கொண்டான்.

இவர்க்குத் திருக்குமாரர்கள் ஐவர். ஐவரும் இங்கே திருப்பரிவட்டத்துடன் காட்சி தருவதைக் காணவேணும். டில்லிமாநகரில் வாழும் ஸ்ரீமான் A. ராமாநுஜாசாரியார்



இவருடைய திருக்குமாரரேயாயினும் இவருடைய ஜ்யேஷ்ட ஸஹோதரரால் ஸ்வீக்ருத ராயினர். ஜநகபிதாவின் கைங்கர்ய கோஷ்டியில் அவரும் அந்வயித்து நடுநாயகமாக விளங்குகிறார்.

ஸ்ரீமதுபயவே கோயில் கந்தாடை அண்ணாவிலப்பன் குமாரவேங்கடாசார்ய



ஸ்வாமியின் திருவடிஸம்பந்தம் பெற்ற இவர்களின் கைங்கரியத்தை அந்த ஸ்வாமிகளும் எழுந்தருளி யிருந்து பரிமளிக்கச் செய்து பூர்த்தி செய்வித்தருளினார்கள். திருநாட்டுக் கெழுந்தருளின அனந்தாசார்ய ஸ்வாமியின் ஆத்மகுண பூர்த்தி அப்ரமேயமாதலால் அவருடைய வியோகம் அப்ரதீகாரமாகவுள்ளது. அவர் பஹுச்ருதராகையாலே கர்மகாண்டங்களில் எவ்விதமான ஸந்தேஹங்களையும் நேர்மையுடன் உடனுக்குடனே பரிஹரித்துத் தெளிவு பிறப்பிப்பது அடியே னுடைய நெஞ்சை விட்டகலாம லிருக்கின்றது. அத்தோடுகூட பூர்வாபரப்ரயோகங்களில் மஹா நிபுணராயிருந்துவந்தார். இந்த ஸ்வாமியின் குடும்பஸ்தர்களுக்கு நம்முடைய நிர்வேதத்தையும் மங்களாசாஸனத்தையும் தெரிவித்து நிற்கிறோம். ...

## கரியமாணிக்கத்தில் அரியமாணிக்கத்தின் மறைவு.

ஸ்ரீரங்கப்ராந்தத்தில் கரியமாணிக்கமென்கிற விலக்ஷணமான அக்ரஹாரத்தில் அரியபெரிய மாணிக்கமாய் விளங்கினவர் ஸ்ரீமதுபயவே. வி. வி. ஐயங்கார் ஸ்வாமி யென்பவர். வேங்கடராமையங்கார் என்பது திருநாமம். ஸுப்ரஸித்த ப்ரபாவராய் விலக்ஷண ஸ்ரீவைஷ்ணவ மணியாய் விளங்கின இந்த மஹான் நேற்று சித்திரை மீ சுக்ல சதுர்த்தியன்று (20—4—69) திருநாடலங்கரிக்க நேர்ந்ததை மிக்க துக்கத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். பெரியாழ்வார் தமது திருமொழியில் "கூடிக்கூடி யுற்றார்களிருந்து குற்றம் நிற்க நற்றங்கள் பறைந்து" என்றொரு பாசுரம் பாடியுள்ளார். இதனால் அவரவர்கள் ஜீவித்திருக்கிற காலத்தில் அவர்களுக்கு எவ்வளவு குணங்களி ருந்தாலும் அஸூயாதிகளாலே அவற்றைப் பேசாதேயிருப்பதோடு குற்றங்களையேறிட்டு தூஷிப்பதும் செய்வர்களென்றும், அவர்கள் மறைந்தவாறே நற்றங்களை வாய்வெருவு வர்களென்றும் குற்றங்களையுங்கூட நற்றமாக உபபாதிப்பர்களென்றும் தெரிவிக்கப் பட்டதாகிறது. ஆனால் இதை ஸர்வ ஸாமான்ய விஷயமாகக் கொள்ளலாகாது. *வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம் புகழவே* என்னுமாழ்வாரருளிச் செயலின்படி உலகம்

போற்றும் புகழுடனே வாழ்பவர்கள் பலருளரன்றே. அத்தகைய யசஸ்விகளில் ப்ரதமபரிகணிதர் வி. வி. ஐயங்கார் ஸ்வாமி. இவர் பாம்பே மகாநகரத்தில் பலவாண்டுகள் உயர்பதவியில் வாழ்ந்தார். அப்போது நாம் வடயாத்திரை செல்லுங்காலங்களில் அந்நகரில் தங்கியிருக்க நேரும்போதுகளில் இந்த ஸ்வாமியோடு நெருங்கிப்பழக நேரும். அப்போதும் இவரை லௌகிக உத்யோகஸ்தரென்று கண்டறியவே முடியாது. இயற்கையாகவே திருமேனி பரம விலக்ஷணமானது. த்வாத சோர்த்வபுண்ட்ரதாரண மின்றியும் பகவதாராதனமின்றியும் ஸத்க்ரந்த காலக்ஷேபமின்றியும் ஒருநாள்கூட இருந்ததில்லை. அங்கு ஸமீபத்திலுள்ள உத்யோகஸ்தர்கள் பலரும் ஸூர்யோதயத்திற்கு முன்னமே நீராடி ஸ்வாமியின் இருப்பிடத்திலே ஸ்ரீ கோசமுங் கையுமாகக் காட்சி தருமழகைப் பலகால் கண்டுகளித்திருக்கிறேன்.

உத்யோகத்தில் விச்ராந்தராய் ஸ்வஸ்தானம் சேர்ந்து பதினைந்து வருடங்களாகி யிருக்கும். அப்போது ஸ்வாமியின் காலக்ஷேப ப்ரக்ரியைகளைப்பற்றிச் சொல்லவும் வேணுமோ? வாரந்தோறும் ஒரு ஸ்ரீமுகம் அடியேனுக்கு ஸாதியாமலிருந்ததில்லை. ஒவ்வொரு ஸ்ரீ முகமும் அநுபவப்ரவாஹ பரீவாஹரூபமாகவேயிருக்கும். அவ்விடத் திலுள்ள தேவப்பெருமாள் ஸன்னிதியில் ஜீர்ணோத்தாரண கைங்கரியத்தைச் சிறப்புறச் செய்துவைத்து ஸன்னிதியில் வாழ்ச்சியை ஒரு பெரிய போதுபோக்காகக் கொண்டிருந்தார். இடையில் இரண்டொரு ஸம்வத்ஸர காலம் திருவரங்கம் பெரிய கோயிலில் நித்ய வாஸமாக எழுந்தருளியிருந்து ஸ்ரீபாஷ்ய மதிகரித்து உபயவேதாந்த ப்ரவர்த்தகருமாயினர். பெருமாள் திருமொழியில் "மறந்திகழுமனமொழித்து வஞ்சமாற்றி வன்புலன்களடக்கி இடர்ப்பாரத் துன்பந்துறந்து, இருமுப்பொழுதேத்தி யெல்லையில்லாத் தொன்னெறிக்கண் நிலைநின்ற தொண்டரான அறந்திகழுமனத்தவர்" என்று ஸ்ரீகுலசேகராழ்வார் போற்றிய பரமைகாந்திகளில் பரிகணநீயராயெழுந்தருளியிருந்த ஸ்வாமியை இவ்விபூதி இழந்தது பரிஹாரமற்ற பரிதாபம். ... ... ... ... ❀

## துயரத்தின்மேல் துயரம்

பேரறிஞரென்று பேர்பெற்ற முதலமைச்சர் அண்ணுதுரையவர்களைப் பிரிந்த துயரம் மறைவதற்குள்ளே ஜனுதிபதியவர்களைப் பிரிந்துபடும் துயரமும் நம்மை யணுகிவிட்டது. "மரணத்திற்குத் தப்பிப்பிழைக்க மனிதனுல் முடியாது" என்னும் முதுமொழியை அடிக்கடி நாம் நினைக்க நேர்ந்துவிடுகிறது. நிலவுலகில் நிமிடந் தோறும் எண்ணிறந்த மரணங்கள் சம்பவித்துக்கொண்டுதானிருக்கின்றன. அவற்றைப்பற்றி விசாரங்கொள்வாரில்லை. உலகமெல்லாம் வருந்தத்தக்க மரணம் இடையிடையே ஏற்பட்டுவிடுகிறது. டாக்டர். ஜாகிர் ஹுஸைன் என்னும் நமது ராஷ்டிரபதி மறைந்த துயரம் எதிர்பாராதது. கோடிக்கணக்கான பாரதமக்களின் உள்ளத்தைக் கொள்ளைகொண்ட இப்பெரியார் பல மதத்தினர்களாலும் அகம் நிறைந்த அன்புடன் போற்றப்பட்டுவந்தார். தாம் ஒரு மதத்தைக் கைப்பற்றினவ ராயினும் பிறமதங்களில் இறையும் இகழ்வின்றி வாழ்ந்தவரென்கிற பெருமை இவர்க்குத் தனிச் சிறப்பாயிருந்தது.

"துன்பத்தை விளக்குங் கடவுளே இன்பத்தையும் விளைப்பார்" என்பது முதுமொழியாதலால் அதனை நம்பித் தேறுதலடைவோமாக. ... ❀

## ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலையின் முதல் ஸம்புடத்தைப்பற்றி.

மணவாளமாமுனிகளருளிச்செய்த திவ்ய க்ரந்தங்களில் 12 கொண்ட முதல் ஸம்புடத்திற்கு 25 ரூ. விலை வைத்திருப்பதால் சில அகிஞ்சனர்கள் சிரமப்படுவதையறிந்த நாம் ஒரு விதமான ஸௌகரியம் செய்திருக்கிறோம். அதாவது, அதனை இரண்டு ஸம்புடமாக்கி பயிண்டு செய்து முதல் ஸம்புடத்திற்குப் பத்து ரூபாயும், இரண்டாவது ஸம்புடத்திற்குப் பதினைந்து ரூபாயும் விலைவைத்திருக்கிறோம். முதல் ஸம்புடத்தில் சேர்ந்திருக்கும் க்ரந்தங்களாவன—திருமந்த்ரார்த்தமென்னும் முமுக்ஷுப்படி வியாக்கியானம்; தத்வத்ரய வியாக்கியானம். யதிராஜ விம்சதி, உபதேச ரத்தின மாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்தி முதலானவை. இரண்டாவது ஸம்புடத்தில் சேர்ந்திருக்கும் க்ரந்தங்களாவன—ஸ்ரீவசனபூஷண வியாக்கியானமும் ஆசார்யஹ்ருதய வியாக்கியானமும்.

**P. B. Annangarachary.**

சிடைக்குமிடம்:—க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்-3.

## அடுத்த இதழின் அறிக்கை.

ஸ்ரீராமாநுஜன் 244-ஆம் இதழ் ஸ்ரீவைஷ்ணவ ஸர்வஸ்வமென்னும் பெயர் பூண்டு பங்குனி விசாக விசேஷ மலராக வெளியிடப்பட்டது. அதில் தெரிவித்திருந்தபடி வைகாசி மஹோத்ஸவ விசேஷ மலராக ஸ்ரீவைஷ்ணவ சிந்தாமணியென்னும் பெயர் பூண்டு அடுத்த இதழ் 246 லக்கம் பெற்று வெளிவரப்போகின்றது. சந்தா செலுத்தாத பல நபர்களுக்கு ஸ்ரீவைஷ்ணவஸர்வஸ்வ விசேஷ மலர் அனுப்பப்படவில்லை. அப்படியே ஸ்ரீவைஷ்ணவ சிந்தாமணி விசேஷ மலரும் அவர்களுக்குக் கிடைக்காது. ... ❋

வைதிகமநோஹரா;—நற்பொருளெழுநூறு என்பது ஸ்ரீராமாநுஜனில் வெளிவந்ததுபோல், வைதிகமநோஹராவென்னும் நமது ஸம்ஸ்க்ருத பத்ரிகையில் ஸதர்த்த ஸப்தசதீ என்பது வெளியிடப்பட்டு வருகிறது. அதில் ஆறுவது சதம் அபிநவகீதார்த்த ஸங்க்ரஹ: என்னும் பெயர் கொண்டது. பகவத் கீதையிலுள்ள விசேஷ விஷயங்கள் [பதினெட்டு அத்யாயங்களிலிருந்தும்] நூறு தொகுக்கப்பெற்றது விலை ஒரு ரூபா. இதைத் தமிழிலும் மொழி பெயர்த்து வெளியிடவேணுமென்று பல அன்பர்கள் கோரியிருக்கிறார்கள். எம்பெருமானருள் வாய்க்கவேணும். ... ❋

வைதிகமநோஹரா 168-ல் ஏழாவது சதமும் வெளிவந்திருக்கின்றது. அதில் ஆசார்யஸூக்தி ரக்ஷா விசேஷித்துக் காணத்தக்கது. ... ... ❋

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# சாத்தாத ஸ்ரீவைஷ்ணவ சமூக வரலாறு.

(ஸ்ரீமான் பள்ளிகொண்டய்யா கோயமுத்தூர் ஜில்லா
சாத்தாத ஸ்ரீவைஷ்ணவ ஸமாஜத் தலைவர்.)

---

நம் சமூகத்தாரை சாத்தாத ஸ்ரீவைஷ்ணவர், தாசநம்பிகள், ஆள்வார்கள், மாலை கட்டிகள், வைஷ்ணவ ஐயர் என்றும் பல பிராந்தியங்களில் தொன்று தொட்டு இருந்து வந்திருக்கிறார்கள். கோயமுத்தூர் ஜில்லாவைப் பொருத்த மட்டில் "வைஷ்ணவ ஐயா" என்றால் நம் சமூகத்தாரை யல்லது எந்த சமூகத்தாரையும் குறிப்பதில்லை.

பெரியாழ்வார் திருமொழி 5ம் பத்து 1-3ம் பாசுரம்

நன்மை தீமைகள் ஒன்று மறியேன் நாரணா வென்னு மித்தனையல்லால்
புன்மையாலுன்னைப் புள்ளுவம் பேசிப் புகழ்வானன்று கண்டாய் திருமாலே
உன்னுமாறுன்னை யொன்று மறியேன் ஓவாதே நமோ நாரணா வென்பன்
வன்மையாவது உன் கோயிலில் வாழும் வைட்டணவனென்னும்
வன்மைகண்டாயே.

இப் பாசுரப்படி கோவிலில் வாழும் வைஷ்ணவ னென்பது நம் சமூகத்தாருக்கே பொருந்தும். எப்படியெனில், இவர்களுக்கு முக்யமான தொழில் பெருமாள் சன்னிதிகளில் புஷ்ப கைங்கர்யங்கள் செய்து வாழ்க்கை நடத்துவதே குறிக்கோளாக இருந்து வந்தது. பல கிராமாந்திர சன்னிதிகளுக்கு, அர்ச்சகராக பல அரசர்களால் மான்யங்கள் பெற்று வாழ்ந்து வந்தார்கள். தற்காலத்திலும் பலர் அர்ச்சகர்களாக இருந்து வருகிறார்கள். கோவிலில் வாழும் வைஷ்ணவர்கள் நம் சமூகத்தாரே என்பதற்கு பெரியாழ்வார் பாசுரமே தக்க சான்று.

சாத்தாத ஸ்ரீவைஷ்ணவர்களின் காலம் மிகவும் தொன்மையானது. இருப்பினும் திருமலை திருப்பதி தேவஸ்தான சரித்திர வரலாற்றில் கண்ட சில ஆதாரங்களைக் காண்போம்.

*History of Tirupathi Vol. II* page 12. Record No. 50 (1551) about the year 1470:—Eighteen panams a month were to be paid to the Sathada Vaishnava who maintained two flower gardens, one on the banks of the Sri Koneri and the other on the banks of the Narasingaraya Koneri.

திருப்பதி சரித்திரம் Vol. II பக்கம் 12. பதிவு நெ. 50. (1551) ஸு 1470. ஸ்ரீ கோனேரிக் கரையிலும், நரசிங்கராய கோனேரிக் கரையிலும் இரண்டு புஷ்ப

நந்தவனங்களின் பராமரிப்புக்காக மாதம் ஒன்றுக்கு பதினெட்டு பணம் சாத்தாத வைஷ்ணவருக்கு கொடுக்கப்பட்டது.

Page 41 Document No. 38, 39/1390 28-2-1468:-Distribution of food among Sathada Vaishanvas as they are called a Speeial seet of Non-Brahmin Vaishnava.

பக்கம் 41 Document No. 38, 39 of 1390. 28-2-1468 சாத்தாத வைஷ்ணவர் என்றழைக்கும், ஒரு பிரத்யேக பிராமணரல்லாத வைஷ்ணவர்களுக்கு பிரசாதம் விநியோகம்.

page 48. Doc. No. 68 23rd Nov. 1476 A. D:-A Share of the food services should go to the 16 Sathada Sri Vaishnavas living in the street of Kandadas Ramanuja Ayyan taking Care of flower gardens called "Ramachandra"

பக்கம் 48. Doc. No. 68. 23-1191476 A. D. (கி. பி.):- 'ராமச்சந்திரா என்னும் புஷ்ப நந்தவனங்களை கவனித்து வரும் கந்தாடை ராமாநுஜய்யன் வீதியில் வசித்து வரும் 16 சாத்தாத ஸ்ரீவைஷ்ணவர்ளுக்கு, ஒருபாக பிரசாதம் சேரவேண்டியது.

page 50. Doc. No. 81 S. 1406. 11-8-14-84:-From the income thereof certain articles were to be supplied by his own Non-Brahmin Sathada Vaishnava deciples resident in Thirupathi.

பக்கம் 50. Doc. No. S. 1460 11-8-1484:- அந்த வருமானத்திலிருந்து திருப்பதியில் வசிக்கும் பிராமணரல்லாத சாத்தாத வைஷ்ணவராகிய தன் சீடர்கள் குறிப்பிட்ட பொருள்கள் வழங்க வேண்டும்.

page 122. Doc 21 of Saka 1433. 13th Jan. 1512:- Flower gardens looked after by a Sathada Vaishnava Singaiyan for whom a part of the donor's share of the food was to be given:

பக்கம் 122. Doc 21 சாக 1433 13-1-1512:-புஷ்ப நந்தவனங்கள் கவனித்து வந்த சிங்கய்யா என்னும் ஒரு சாத்தாத வைஷ்ணவருக்கு பிரசாதத்தில் ஒரு பங்கு கொடுக்கப்படவேண்டும்.

Page 125 Doc. 102 of 1436. 4th May 1514:-is a donation by Sathada Sri vaishnava by name Bhattarpiran Ayyan a deciple of Paravasthu Anna. He is described as Ekanki that is a bachelor, and made a deposit of 150 panam, in the treasury of Nammalvar temple.

பக்கம் 125 Doc. 102. 1436. 4-5-1514:- பரவஸ்து அண்ணருடைய சீடன் பட்டாபிரான் அய்யன் என்ற ஒரு சாத்தாத ஸ்ரீவைஷ்ணவ பிரம்மசாரி 150 பணம் நம்மாழ்வார் சன்னிதி கஜானுவில் சேமிப்பு வைத்தார்.

Page 134 Doc. No. 156 of S. 1445 21st Oct 1523:- The orders of the Stanattan of Tirumalai by the managers of the temple of Nammalvar in Tirupathi with a Sathada Srivaishnava Bachelor bhattarpiran Ayyan a deciple of Paravasthu Anna.

பக்கம் 134 Doc. நி. 156, சா. 1445. 21—10—1413:— பரவஸ்து அண்ணா் சிஷ்யன் பிரம்மசாரி பட்டர்பிரான் அய்யன் என்ற சாத்தாத ஸ்ரீ வைஷ்ணவருக்கு திருப்பதிநம்மாழ்வார்சன்னிதிநிர்வாகஸ்தர்களின், திருமலை ஸ்தானத்தார்கட்டளை.

Page 149.—Several of these gardens were under the management of those single men either Vaishnava Brahmins often times Sanyasis or under Non Brahmin Vaishnavas called Sathada Vaishnavas who being Non Brahmins were not entitled to wear clothes as Brahmin Vaishnavas do. This arrangement seems to have worked generally well.

பக்கம் 149. இந்த நந்தவனங்களில் பல ஏகாங்கிகளான வைஷ்ணவ பிராமணர்கள், அல்லது பிராமணரல்லாத சாத்தாத வைஷ்ணவர்கள் என்றழைப்பவர் களால் மேற்பார்வையிலிருந்தன. இந்த நிர்வாகம் பொதுவாக நல்லமுறையில் நடைபெற்றது. சாத்தாத வைஷ்ணவர் பிராம்மண வைஷ்ணவர்களைப்போல் உடை உடுக்கக்கூடாது.

Page 238. No. 152 of 1432 31st Dec. 1540:—The donor's share of the food service was to be received by Sathada Srivaishnava Appaiyan S/o Tiruttani Timmayyan a residence Ramanujayan Thiruvidu.

பக்கம் 238 நி. 152, 1432 41—12—1540:— ராமாநுஜய்யன் திருவீட்டில் வசிக்கும் திருத்தணி திம்மையன் குமாரன் அப்பையன் என்ற சாத்தாத ஸ்ரீவைஷ்ண வருக்கு பிரசாதத்தின் ஒருபாகம் பெறவேண்டும்.

Page 74:—A. D. 1467. In Srirangam one of the Thirtham Mirasdars is a Sathada Srivaishnava. In the Tirumalai Temple these Sathada Srivaishnavas enjoyed the privelege of supplying all the articles required for Tirumanjanam carried in procession round the temple before being delivered inside. They were receiving honours and emoluments in return. [They also enjoyed the privelege of reciting Prabandam in goshti along with the Brahmin Srivaishnavas and were given emoluments thereof. For some reasons or other they ceased from the sacred duty. Inscriptions bear testimony to the practiec.]

பக்கம் 74. A. D. 1466 ஸ்ரீரங்கம் சன்னிதியில் தீர்த்தம் மிராஸ்தார்களில் ஒருவர் சாத்தாத ஸ்ரீவைஷ்ணவர். திருமலை கோவிலில், திருமஞ்சனத்திற்கு வேண்டிய வஸ்துக்கள் யாவும் சாத்தாத ஸ்ரீவைஷனவர்கள் கொடுக்கும் உரிமை பெற்றிருந்தார்கள். அதற்காக அவர்களுக்கு மரியாதைகள் வழங்கப்பட்டன.

ஸ்ரீவைஷ்ணவபிராமண கோஷ்டியுடன் பிரபந்த காலக்ஷேபம் செய்யும் உரிமையும் இருந்தது. எக்காரணத்தினலோ இந்த தெய்வீகமான கைங்கர்யம் விட்டுப் போயிற்று. சிலா சாசனங்கள் இம்முறைக்கு அத்தாக்ஷியாயிருக்கின்றன.

மேற்கூறியபடி, திருமலை தேவஸ்தான ஆதாரங்களைக் கொண்டு பார்க்கும் போது. நம் சமூகத்தாரின் சரித்திரம் சுமார் 500 வருடங்களாக பெருமாள் சன்னிதிகளில் புஷ்ப கைங்கர்யங்கள் செய்து கொண்டு சாத்தாத ஸ்ரீ வைஷ்ணவர் கள் என்று இருந்து வந்திருக்கிருர்கள் என்பது ஸ்பஷ்டம். 500 வருடங்களுக்கு முன்னும் இருந்திருக்கலாம் ஆனல் தக்க ஆதாரங்கள் கிடைக்கவேண்டும்.

சாத்தாத ஸ்ரீ வைஷ்ணவர்கள் எம்பெருமானர் காலத்திலேயே இருந்திருக் கிருர்கள். பிள்ளையுறங்கா வில்லிதாசர் சாத்தாத ஸ்ரீ வைஷ்ணவவகுப்பைச் சேர்ந்தவர் என்பதற்கு ஆதாரங்களுண்டு.

ஸ்ரீ வில்லிபுத்தூர் கிடாம்பியாச்சான் மரபினர் வழக்கறிஞர் ஸ்ரீமான் K. S. திருநாராயணய்யங்கார் ஸ்வாமி எழுதிய "இராமாநுஜ வைபவம்" என்ற நூலில், சிலவிடங்களில், காஞ்சிபுராணர் திருக்கச்சி நம்பி சாத்தாத ஸ்ரீ வைஷ்ணவர், எக்ஞோபவீதம் சாத்தாதவர். பிராமணரல்லாதார். இவரை ஸ்ரீ ராமாநுஜர் ஆச்ரயித்து, பணிபுரிய எண்ணினதாகவும், அதற்கு திருக்கச்சிநம்பி சம்மதிக்க வில்லையென்றும் இருக்கிறது. விளக்கம் ஷை நூலில் காணலாம். சாத்தாத ஸ்ரீ வைஷ்ணவர்களின் ஏற்றம் ஸ்ரீ ராமாநுஜர் காலத்திலேயே உண்டு.

சாத்தாத ஸ்ரீ வைஷ்ணவர்கள் சிறு பான்மையராக இருந்தபோதிலும், அவர்கள் மிக்க செல்வாக்கும் பொதுஜனங்களின் அபிமானமும், வைராக்யமும் உடையவர்கள். ஸ்ரீரங்கம் சன்னிதியில் ஸ்ரீமான் எல்லக்கரை ஸ்ரீ இராமாநுஜய்யர் அவர்களின் வைராக்யம்பொருந்திய வீரச்செயல் யாவருக்கும் தெரிந்ததே. ஆழ்வார்திருநகரி வரலாற்றில் (தேவஸ்தான வெளியீடு) ஆராய்ச்சி 6:- "ஆழ்வார் திருநகரியில் ஒன்பது சிவன்கோவில்கள் இருந்தன. அவற்றை ஒரு சாத்தாதவர் அழித்து நதியின் அலைகல்லை கட்டினர்" இவ்வாறு துணிந்து செய்த காரியத்திற்கு எத்தன்மையான பராக்கிரமம், பொதுஜன ஒத்துழைப்பு, அபிமானம், இருந்திருக்க வேண்டுமென்பதை ஒருவாறு யூகிப்போமாக.

மேற்கூறியபடி சரித்திர ஆதாரங்களைக்கொண்டு சாத்தாத ஸ்ரீவைஷ்ணவர் கள் பல நூற்றுண்டுகளாக பெருமாள் சன்னிதிகளில் நந்தவன பராமரிப்பு செய் தும் புஷ்ப கைங்கர்யஸ்தர்களாகவும், அர்ச்சகர்களாகவும், பகவத் பக்தர்களாக சிறப்புடன் காலக்ஷேபம் செய்து வந்திருக்கிருர்கள். ... ... (*)

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

## ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியருடைய விஜ்ஞாபனம்.

# உத்தமூர்ஸ்வாமியின் உத்தமோபகாரம்.

நீசனேன் நிறையொன்றுமிலேன் நெஞ்சு கனிந்து குளிர்ந்து நளிர்ந்து நிகழ்த்துமிவ்வுரையை எண்டிசையோரும் குறிக்கொள்க. ஸ்ரீமத் உத்தமூர்ஸ்வாமியின் கைம்மாறிலாத பேருதவியை என்னென்றியம்புவேன். ஆழ்வார் *கண்டாயே நெஞ்சே! கருமங்கள் வாய்க்கின்று, ஓர்எண்டானுமின்றியே வந்தியலுமாறு* என்று, தாம் பெற்ற பேற்றின் கனத்தை உன்னியுன்னியுகந்து தம் திருவுள்ளத்தோடே உசாவினர். அடியேன் உலகறிய வெளியிட்டுத் தரிக்கின்றேன்.



ஆழ்வார் *அறியாக்காலத்துள்ளே அடிமைக்கணன்பு செய்வித்து* என்றாப்போலே, அடியேன் அறியாக்காலமே தொடங்கி உலகுக்கு நன்மையென்றே கருதிப் பல துறைகளில் நூல்களை இயற்றி வெளியிட்டுவருகின்றேன். அவற்றுள் பரபக்ஷ ப்ரதிக்ஷேபத்துறை யென்பதோர் துறையுமுண்டாகி. அதில் பிறருடைய துர்வாதங்களுக்கு மறுப்பான நூல்கள் [வடமொழியிலும் தென்மொழியிலும்] வெளியிடப்பட்டு வருகின்றன வென்பதை அறியாதாரில்லை. அப்படி நாம் வெளியிட்டுவரும் நூல்கள் [மறுப்புச் சுவடிகள்] இதுகாறும் வெளிவந்தவை நூற்றுக்கு மேற்பட்டவை என்பதும் உலகமறிந்ததே. அவற்றில் பலவற்றுக்குப் பிறரிடமிருந்து மறுப்புரை தோன்றியதே கிடையாது. சிலவற்றுக்கு மட்டும் (பல வருடங்களுக்கு முன்பு) சிலரால் சிறிது மறுப்பு வெளியிடப்பட்டு அவை உடனுக்குடனே நம்முடைய மறுப்புரைகளினல் மாய்ந்தனவென்பதும் மாநில முழுதுமறிந்தது. ஆக, நமது மறுப்பு நூல்கள் அத்தனையும் இதுகாறும் வெற்றியுடன் விளங்குமவையேயன்றி, பங்கமடைந்து நிற்கும் (நூல்) காகிதம் ஒன்றுகூடக் கிடையாதென்பது திண்ணம்.

அஸஹிஷ்ணுதை என்னும் நோய்க்கு மருந்தே கிடையாதாதலால் அதற்கு வசப்பட்டவர்கள் சிலர் "ஏதோ எழுதிவருகிருர், ஏதோ அச்சிட்டுவருகிருர்; அவற்றைக் கணிசிப்பவர்களில்லாமையாலே தமது நூல்கள் வெற்றிபெற்றுவிட்டனவாக நினைக்கிருர்" என்று சில அறிவிலிகளிடம் பேசிக்கொள்வதுண்டு. தெய்வம் இதை ஸஹிக்குமதன்றே. அடியேனுடைய எழுத்துக்களெல்லாம் கல்வெட்டும் செப்பேடுமானவையென்று உலகம் நம்பும்படி ஸ்ரீமதுபயவே. அபிநவதேசிக. உத்தமூர். வீரராகவாசாரியர் ஸ்வாமியைக் கொண்டு எம்பெருமான் செய்வித்த அதிசயம் ஈண்டு விளக்கிக் காட்டப்படுகின்றது.

*

இக்கச்சிமாநகரில் ப்ரக்க்யாதராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமி சிலபலவாண்டுகட்கு முன்பு பாடசோதனம் என்றொரு புத்தகத்தை வடமொழியில் எழுதி யச்சிட்டு வெளியிட்டிருந்தார். (அதன் விஷய மென்னவென்றால்) கீதாபாஷ்யம், ஸ்ரீபாஷ்யம் முதலான காலக்ஷேப க்ரந்தங்களில் சிலபல தவறுகள் ஓலையேடுகளிலுங்கூட சோதிக்கப்படாமல் ஏறிவிட்டனவாகவும், அவற்றைத் தாம் பெரும்பாலும் தம்முடைய புத்திபலத்தாலே சோதிப்பதாகவும் காட்டி "அது அப்படியிருக்கவேணும், இது இப்படியிருந்தால் நன்றாயிருக்கும்; அதை அப்படித் திருத்தலாமென்று தோன்றுகிறது, இதை இப்படித் திருத்தினாலொழியப் பொருந்தாது" என்று இங்ஙனே பலபல வகையாகவெழுதி, நெடுங்காலமாகப் பெரியோர்கள் பேணிவந்த பாடங்கள் பலவற்றை சின்னபின்னமாக்கியிருந்தார். அது அடியேனுடைய பார்வைக்கு வந்தது. "பல பெரியார்கள் பக்கலிலே இங்ஙனே பாடம் கேட்டிருக்கிறேன்" என்றோ, "தாளகோசங்களில் இங்ஙனே பாடம் காண்கிறது" என்றோ அந்த ஸ்வாமி தெரிவித்திருந்தாராகில் உபேக்ஷித்திருக்கலாம். அப்படியல்லாமல், தாம் ஊஹிப்பதாகவும், தம்முடைய ஆலோசனையில் இப்படியிப்படி தோன்றுவதாகவுமே யெழுதியிருந்தபடியால் இதை விமர்சித்தேயாகவேணுமென்று தோன்றிச் சிரமப்பட்டுப் பல ஸ்ரீகோசங்களை யாராய்ந்ததில் அந்த பாடசோதன க்ரந்தம் மறுக்கத்தக்கதே யென்று நிச்சயிக்கப்பட்டு "பாடசோதந பரீக்ஷா" என்கிற மறுப்பு நூலை விரிவாகவே யெழுதி வெளியிட்டேன்.

(1) ஸ்ரீ பாஷ்யாதிகள் தெலுங்கு, க்ரந்தம், நாகரி ஆகிய மூன்று லிபிகளில் வெகுகாலமாகவே பதிப்பேறியிருப்பதால் அவற்றில் திருத்தம் பெற்றிருக்கிற பல பாடங்களைத் தாம் திருத்துவதுபோல் காட்டுகிறார்; (2) அவசியம் திருத்தவேண்டிய இடங்களைத் திருத்தாமலே விட்டிருக்கிறார்; (3) இவர் புதிதாகத் திருத்தியிருப்பவையெல்லாம் விபரீதங்கள், ஒன்றுகூட ஏற்கத்தக்க திருத்தமன்று; ச்ருதப்ரகாசிகையை நோக்காமலே சில திருத்தங்கள் செய்திருக்கிறார்—என்று இவ்வகையில் விஷயங்களைக் கண்ணாடி போல் எடுத்துக்காட்டி அவருடைய சோதனம் அப்ராமாணிகம் என்று முடித்திருந்தேன். அந்த பரீக்ஷாக்ரந்தம் வைதிக மநோஹரா மூலமாக உலகம் பரவியிருந்தது. [இது 1945-ஆம் வருஷத்தில்.]

"ஜ்ஞாதாவாயும் உத்தமாச்ரமியாயுமிருக்கிற மஹாஸ்வாமியின் க்ரந்தத்தை இவன் ஏதோ அஸூயையினால் பழித்துவிட்டான்; இது ஸ்வாமிக்கு மிகவும் அவஜ்ஞாவஹமல்லவா? இதை நாம் வெறுமனே விட்டுவிடலாகாது; ஸபை கூட்டி இவனை வரவழைத்து வாய்மாளப் பண்ணியேயாகவேணும்" என்று கனத்த ரோஷத்தோடு தீவ்ரமான முயற்சிகொண்ட அந்த ஸ்வாமியின் சிஷ்யவர்க்கங்கள் ஒரு நாளைக் குறிப்பிட்டு, தேவப்பெருமாள் ஸந்நிதி நூற்றுக்கால் மண்டபத்தில் வித்வத்ஸபை கூட்டுவதாக விளம்பரம் வெளியிட்டு அடியேனுக்கும் அறிவித்தார்கள். குறிப்பிட்ட ஸமயத்தில் அங்கு விடைகொண்டேன். மண்டபம் நிறையப் பல வித்வான்கள் கூடியிருந்தார்கள். இப்போது ஸ்ரீமதஹோபில மட ஆஸ்தானத்தை யலங்கரித்தருளாநின்ற ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீமத் அழகியசிங்கர் [அப்போது க்ருஹஸ்தாச்ரமியாய்] அந்த ஸதஸ்ஸை அலங்கரித்தருளியிருந்தபடி. [இதில் அடியேன் எழுதும் விஷயங்களில் ஏதேனும் பொய்ம்மையிருப்பதாகத் தோன்றினால் அந்த மஹா ஸ்வாமி மூலமாக

மெய்ம்மையுணரலாமென்றே ஸ்ரீ ஸ்வாமி திருநாமத்தை இங்கு நிர்தேசித்தபடி.] பூர்வாச்ரமஸ்த கோழியாலம் ஸ்வாமிக்கும் அடியேனுக்கும் உபாத்யாயராயிருந்த ஸ்ரீமதுபயவே. (கீர்த்திமூர்த்தியான) இளங்காடு. ரங்காசாரியர் ஸ்வாமி ஸதஸ்ஸுக்கு அக்ராஸநாதிபதியாக வரிக்கப்பட்டிருந்தார். கோழியாலம் ஸ்வாமியின் சோதனங்களையெல்லாம் யுக்தமென்று ஸ்தாபிப்பதற்காக அவருடைய அந்தேவாஸிகளில் தலைவரான ஸ்ரீமதுபயவே. உத்தமூர். வீரராகவாசாரியர்ஸ்வாமி வெளியூரிலிருந்து ஸதஸ்ஸுக்கு வரவழைக்கப்பட்டிருந்தார். அவர் புரிந்த உத்தமோபகாரமே இங்கு விளக்கப்படுகிறது.

ஸதஸ்ஸு ஆரம்பமாவதற்குமுன்னே அடியேனுடைய பாடசோதன பரீக்ஷையில் அது தவறு, இது தவறு என்று சில வித்வான்களிடம் பேசிக்கொண்டிருந்தார். பிறகு ஸதஸ்ஸு ஆரம்பமாயிற்று. அடியேனுடைய பரீக்ஷா க்ரந்தத்தை முன்னாடியே பல வித்வான்களுக்கு ஸமர்ப்பித்திருந்தேனாதலால் அவரவர்கள் முன்னமே கடாக்ஷித்திருந்து விமர்ச வைகரியில் அடியேனைச் சில கேள்விகள் கேட்கவும் அடியேன் விடை கூறவுமாக நடந்துகொண்டிருந்தது. பிறகு ஸமாதானம் சொல்லவேண்டிய ஸமயம் அணித்தாக, ஏழெட்டு நிமிஷங்களுக்கு முன்னமே உத்தமூர் ஸ்வாமி யெழுந்து சென்றுவிட்டார். திரும்பி வருவரென்றே ப்ரதீக்ஷித்திருந்தார்கள் வித்வான்கள். மேற்கே தேரடியருகில் சென்றுகொண்டிருக்கிறாரென்று சிலர் சொல்லக் கேட்டபின் ஸதஸ்ஸு விஸர்ஜனம் செய்யப்பட்டது. அவர் எழுந்து சென்றதற்குக் காரணம் இன்னதென்று ஒருவருமறிந்திலர். தம்முடைய கக்ஷிக்கு அனுகூலரான வித்வான் ஒருவருமிருந்திலரென்று சென்றதாகப் பிறகு பேசிக்கொண்டார்கள். அதைப்பற்றி இப்போது விசாரலேசமுமில்லை. அச்செய்திகளை அனைவரும் அறவே மறந்துவிடலாம். ப்ரக்ருதம் அடியேன் விஜ்ஞாபிக்கும் விஷயத்தைக் குறிக்கொண்மின்.

ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமி திருநாடலங்கரித்துவிட்டாலும், அவருடைய பாடசோதன க்ரந்தமோ, அதற்கு மறுப்பாக அடியேனெழுதிய பரீக்ஷாக்ரந்தமோ மறையவில்லையே. உத்தமூர் ஸ்வாமி ச்ருதப்ரகாசிகையோடு ஸ்ரீ பாஷ்யத்தை அச்சிட்டு வெளியிட்டிருக்கிறாரென்பதை அறியப்பெற்ற நாம் கோழியாலம் ஸ்வாமியின் பாடசோதன க்ரந்தத்தில் மிகவும் யுக்தமானதென்று காட்டப்பட்டுள்ள பாடங்களை இந்தப் பதிப்பில் இவர் ஆதரித்து வெளியிட்டிருக்கிறாரா? நம்முடைய மறுப்புகளுக்கு ஏதேனும் விடை கூறியிருக்கிறாரா? என்று பார்க்கத் தோன்றிப் பரிசீலித்துப் பார்க்கையில், ஸ்வாசார்யருடைய சோதனங்களை த்ருணீகரித்துத் தள்ளினதோடு அடியேன் பரீக்ஷாக்ரந்தத்தில் ஸ்தாபித்த பாடங்களையே பெரும்பாலும் பதிப்பித்திருக்கும்படியைக் கண்டேன். "ஆசார்யாதிஹ தேவதாம் ஸமதிகாம் அந்யாம் ந மந்யாமஹே" என்ற தேசிக திவ்ய ஸூக்திப்படி ஆசார்யரையே பரதெய்வமாகக் கொண்டிருக்குமிவர்—அவருடைய உபதேசங்களையே அருமருந்தாகக் கொண்டிருக்குமிவர் என்னசெய்யவேண்டும். ஆசார்யர் திருத்திக்கொடுத்த பாடங்களைத் தாம் ஆதரித்தமை காட்டவேண்டும், ப்ரதான பாடமாகப் பதிப்பியாவிடினும் (புட்நோட் கொடுக்கும் முறையில்) பாடாந்தரமாகவாவது பதிப்பித்திருக்க வேண்டாமா? (கோழியாலம்) ஸ்வாமி திருத்திய பாடங்கள் தவறு என்பதை நான் ஸாமான்யமாகக் காட்டியிருக்கவில்லை; ஒவ்வொன்றிலும் விபுலமான நிரூபணங்களை அசைக்கமுடியாதபடி செய்திருக்கிறேன். ஏதேனுமொருவகையில்

அவற்றுக்கு மறுப்பு வெளியிட்டிருக்கவேண்டும். ஸர்வாத்மனா கைகூப்பிநிற்கும் நிலையே காண்கிறது. இவ்விஷயங்கள் வித்வான்கள் விமர்சிக்கவேண்டியவையாதலால் ஸம்ஸ்க்ருதத்திலேயே விரிவாக விளக்கியெழுதிய ஆசார்ய ஸூக்திரக்ஷா என்னும் நூலை இத்துடன் சேர்த்து வெளியிடுகிறேன். ஆசார்யர் திருத்தின பாடங்களை இவர் கைக்கொள்ளாமல் தள்ளினது தவிர, ஸ்வேச்சையாகச் சில மாறுபாடுகளையும் [சில என்று ஏன்? பல மாறுபாடுகளைச்] செய்திருக்கிறார். அவற்றிலும் சில எடுத்துக்காட்டியிருக்கிறேன். ஸ்வாசார்யர் திருத்திக்காட்டின பாடங்களை ஏன் கொள்ளவில்லை? என்று கேட்டால், "உலகுக்கெல்லாம் உபயோகப்படக்கூடிய ஸ்ரீகோசத்தில் விவாதாஸ்பதமான பாடங்களை யதேஷ்டமாகப் புகுத்தலாகாதென்கிற எண்ணத்தினால்—என்று இவர் விடைகூற முடியாதபடிக்கன்றோ இவருடைய பதிப்பு அமைந்துள்ளது.

உலகமறிய ஒன்றே காட்டுகிறேனிங்கு. ஸ்ரீ பாஷ்யோபக்ரமத்தில் ஸமாஸ விஷயமான சங்காஸமாதான ஸ்தலத்தில் "ப்ரதிப்ரஸவ ஸம்பவாத்" என்றே உலகமெங்குமுள்ள பாடம். ஒரு தாளகோசத்திலிருந்து அடியேன் உபதேசம் பெற்ற பாடம் ஸத்பாவாத் என்பது. இப்பாடத்தை அடியேன் தவிர வேறு யாரும் ப்ரஸ்தாவித்ததில்லை. 'இது இவன் ஸ்வதந்திரமாகக் கல்பித்தபாடம்' என்று வித்வான்கள் இற்றைக்கும் விவாதப்பட்டே வருகிறார்கள். ஏறக்குறைய ஐம்பது வருஷமாக இது விவாதத்திலுள்ளது. இப்படியிருந்தும், இவர் ச்ருதப்ரகாசிகாயுக்த ஸ்ரீ பாஷ்யப் பதிப்பில் ஸம்பவாத் என்கிற பாடத்தை அறவே தள்ளி ஸத்பாவாத் என்கிற பாடத்தையே நிஸ்ஸபத்நமாகப் பதிப்பித்துவிட்டார். 'ப்ரதிவாதிபயங்கரருடைய பாடம் பேர்க்கவும் பேராதது' என்பதே இவருடைய திடநம்பிக்கை. இந்த நம்பிக்கையினால்தான் ஸ்வாசார்யர் சிக்ஷித்த பாடங்களையும் தள்ளி நான் ஸ்தாபித்த பாடங்களையே கொண்டிருக்கிறாரென்பதில் வாய்திறக்க வழிகிடையாது. ஸம்பவாத் என்ற பாடத்தைக் கோழியாலம் ஸ்வாமியும் திருத்தவில்லை.

இரண்டு விஷயங்களை முக்கியமாகத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். (1) கோழியாலம் ஸ்வாமியின் பாடத் திருத்தங்கள் மிகவும் அநீதியானவையென்று நான் எழுதிப் பிரசுரஞ் செய்ததை (அக்காலத்தில்) மறுக்க முயன்றவிவர், இத்தனைகாலம் பொறுத்து "முன்மறுக்க முயன்றது பிசகு; பரீக்ஷாக்ரந்தத்திலெழுதி யுள்ளதெல்லாம் பாராட்டத்தக்கதே"யென்று தமது பதிப்பினால் கல்வெட்டாக்கி வைத்ததனால்—இதேபோல் என்னுடைய எந்த நிரூபணமும் ப்ராமாணிகமே, அசைக்கமுடியாததே—என்று நிலைநாட்டி வைத்தாராகிறார். (2) கோழியாலம் ஸ்வாமி புகுத்தின பாடங்களை அவருடைய அந்தேவாஸியான இவர் திரஸ்கரித்ததுபோல, இவர் இப்போது புகுத்தின பாடங்களை இவருடைய அந்தேவாஸியென்று ஒருவர் கிளம்பித் திரஸ்கரிக்கவே போகிறார். ஆஸ்தான பரம்பரைபோல இதுவும் பரம்பரையாக வருவது அழகியதே.

இத்தோடு சேர்ந்துவரும் ஆசார்ய ஸூக்திரக்ஷா என்கிற வடமொழி நூலை அடியேன் நேற்று எம்பெருமானார் மஹோத்ஸவத்தில் ஸ்ரீபெரும்பூதூரில் எழுதிக்கொண்டிருக்கையில் அடியேனுடைய சிரந்தந ஸௌஹ்ருந்மணியும் ஸஹ்ருதயருமான ஸ்ரீமதுபயவே. (திருவெவ்வுளூர்.) பழவேரி. கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி யாத்ருச்சிகமாக அங்கே காட்சிதந்து இது என்ன லேகனமென்று கேட்கையில் ஒருமணி காலம் விஷயங்களை

விரிவாக விஜ்ஞாபித்து, இதை விரைவில் அச்சிட்டு ஸ்ரீமத் பரமஹம்ஸ. அழகியசிங்கர் ஸந்நிதிக்கும் அவ்விடத்து ஆஸ்தான வித்வான்களுக்கும் அனுப்புவேன்; விஷயங்களை ஆழ்ந்து விமர்சிக்க ப்ரார்த்தித்ததாக விஜ்ஞாபிக்கவேணுமென்றேன். ஓமென்றிசைந்து சென்றார். ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஸ்ரீமதாண்டவன் ஸந்நிதியிலும் இங்ஙனே ப்ரார்த்திக்கிறேன்.

மற்றும் அடியேனுக்குப் பரமாப்தர்களாய் விளங்கும் உப்பிலியப்பன் ஸந்நிதி நவநீத ஸஹோதரர்கள், வைகநல்லூர் நடாதூர்ஸ்வாமி, மதுராந்தகம் பாதூர்ஸ்வாமி, கோமல்ஸ்வாமி, திருப்பதி கலாசாலையில் விளங்கும் வித்வான்கள், திருவரங்கம் பெரிய கோயிலில் திகழும் தோதவத்தித் தூய்மறையோர், சென்னையில்வாழும் ப்ரவசன ப்ரவீணர்கள் பலரையும் இங்ஙனே ப்ரார்த்திக்கிறேன். ஆந்தராளிக ஸம்ப்ரதாய விஷயமாக இருந்தால் இப்படி அடியேன் ப்ரார்த்திக்க இடமில்லையாகும். ஒரு தலையான அபிமானத்தினால் உண்மையை வெளியிடமுடியாமல் தளரவேண்டியிருக்குமதில். இதில் கலாவைஷம்யம் பாராட்ட ப்ரஸக்தியின்மையால் தடஸ்தபாவத்தை யவலம்பித்து, தத்துவத்தை வெளியிட முடியுமென்று நம்பிப் ப்ரார்த்திக்கிறபடி. வெளியிடாவிடினும் அவரவர்களது உள்ளமுணருமத்தனையே போதும்.

இத்துடன் சேர்த்து வெளியிடப்பட்டுள்ள (ஸம்ஸ்க்ருதபாஷையிலமைந்த) ஆசார்ய ஸூக்தி ரக்ஷையின் விஷயங்களை வடமொழியறியாதாரும் ஸாரமாகத் தெரிந்துகொள்ள ஓர் வினவிடை அமைக்கப்படுகிறது.

விநாக்கள்—மத்யஸ்த வித்வான்களினுடையவை.
விடைகள்—உத்தமூர்ப் பண்டிதருடையவை.

1. வினா:—அந்தரத்வாதிகரண ஸ்ரீ பாஷ்யத்தில் *ந ச த்வயோரநயோ:* என்று தொடங்கும் வாக்கியத்தில் (த்வயோ:) என்கிற பதம் இருமுறை விழுந்திருப்பது பிசகென்றும், அது ஒரு முறைதானிருக்கத் தக்கதென்றும், மற்றொரு முறையிருப்பதை அடித்துவிடவேணுமென்றும் கோழியாலம் ஸ்வாமியின் பாடசோதனத்தில் இருக்கிறதே, அதை என்ன பண்ணினீர்? அடித்துவிட்டீரா?

விடை:—அங்கு ச்ருதப்ரகாசிகையில் (த்வயோ:) என்பது இருமுறையிருப்பதை நிலைநாட்டி, ஒன்று வாக்யபரமென்றும் மற்றொன்று உபாஸநபரமென்றும் விவரித்திருப்பதாக நம் அண்ணா தமது பரீக்ஷாக்ரந்தத்தில் மறுவாய்திறக்க வழியில்லாதபடி நிரூபித்திருப்பதனால் கோழியாலம் ஸ்வாமி திருத்தியது தவறென்று துணிந்து அண்ணா நிலைநாட்டிய படியே அச்சிட்டிருக்கிறேன். வேறு என்னபண்ண முடியும்?

2. வினா:—தக்ஷிணாயநாதிகரண ஸ்ரீ பாஷ்யத்தில் *ப்ரஹ்ம ப்ரபித்ஸத:* என்றிருப்பது வியாகரண விருத்தமென்றும், (ப்ரபித்ஸத:) என்பதை (ப்ரபித்ஸமாநஸ்ய) என்றாவது (ப்ரபித்ஸோ:) என்றாவது திருத்தவேண்டுமென்றும் உமது ஆசிரியர் எழுதியிருந்தாரே, அங்கு என்ன செய்தீர்?

**

விடை:—இப்படி ஸ்வேச்சையாகத் திருத்துவது ஸாஹஸமென்றும், திருத்த வேண்டுவது அவசியமானுல் (ப்ரபித்ஸத:) என்பதை (ப்ரேப்ஸத:) என்று திருத்துவதோ (பாடாந்தரமாகக் கொள்வதோ) பொருத்தமென்றும் உபபத்தியோடு அண்ணு எழுதியிருந்தபடியால் அதுதான் மிகவும் யுக்தமென்றுகொண்டு அப்படியே அச்சிட்டேன்.

3. வினு:—ஈக்ஷதிகர்மாதிகரண ஸ்ரீ பாஷ்யத்தில் *ஈக்ஷிது: ஸ்தாநதயா நிர்திஷ்ட* என்றவிடத்தில் (ஈக்ஷிது:) என்பது அந்வயிக்கமாட்டாதென்றும் (ஈக்ஷிதஸ்தாநதயா) என்று திருத்தியே யாகவேண்டுமென்றும் (தத்ஸ்தாநதயா) என்ருவது திருத்தியாக வேண்டுமென்றும் கோழியாலம் ஸ்வாமி எழுதியிருந்தாரே, அப்படியே திருத்தினீரா?

விடை:—இங்கு ஸ்வாமி ஏதோ மருண்டுவிட்டாரென்றும், மறுபடியும் ஸ்ரீ பாஷ்ய பங்க்திகளை ஸேவித்தால் தெளிவு பிறக்குமென்றும், (ஈக்ஷிது:) என்றுதானிருக்க வேணுமென்றும் அண்ணு நன்கு விளக்கியிருப்பதனுல் உண்மையில் இங்கு ஸ்வாமி ப்ரமித்துவிட்டதாகவே தெரியவந்தபடியால் ஸ்வாமி திருத்தின பாடத்தை உபேக்ஷிக்கவே நேர்ந்துவிட்டது.

4. வினு:—இந்த்ரப்ராணுதிகரண ஸ்ரீ பாஷ்யத்தில் உபாத்தமான *த்வமேவ மே வரம் வ்ருணீஷ்வ யம் த்வம் மநுஷ்யாய ஹிததமம் மந்யஸே* என்கிற ச்ருதிவாக்யத்தில் (த்வமேவ) என்பதை (தமேவ) என்று திருத்தவேணுமென்று ஸுப்ரஸித்தரான ஓர் ஆசாரியர் உபதேசித்ததாக உம்முடைய ஆசாரியர் எழுதியிருக்கிருரே, அதை அப்படியே திருத்தினீரா?

விடை:—அந்தோ! எப்படித் திருத்தமுடியும்? மேலே (யம்) என்றிருப்பதற்குச் சேர, முன்னே (தம்) என்றிருக்கவேணுமென்று ஸ்வாமி நினைத்துவிட்டார்; அது பிசகென்று அண்ணு வெகுயுக்தமாக நிரூபித்திருப்பதால் இதுவே சிறந்த ஆசார்யோபதேசமென்று கொண்டேன். இது ச்ருதிவாக்யமென்பதை ஸ்வாமி சிந்தியாமற்போனுர். திருத்துவது ஆத்மஸாக்ஷ்யத்திற்கு ஒவ்வாததோடு அபவாதத்திற்கும் ஹேதுவாகுமென்று விட்டிட்டேன்.

5. வினு:—ப்ரயோஜநவத்த்வாதிகரணத்தில் *வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாதித்யாதி ஸூத்ர ஸ்ரீ பாஷ்யத்தில் ஐந்தாறு பங்க்திகளுக்குப் பிறகு "தத்ரோத்தரம்—ந ஸாபேக்ஷத்வாத் இதி" என்றுள்ள ஸ்ரீஸூக்தியை அங்கிருந்து பெயர்த்து ஸூத்ரத்திற்குமுன்னே கொண்டு தள்ளவேணுமென்று உமதாசிரியர் எழுதியிருந்தாரே, அப்படியே தள்ளினீரா?

விடை:—தள்ளினதுண்டு; ஸ்ரீ பாஷ்யஸூக்தியைத் தள்ளவில்லை; அஸ்மதாசார்யோக்தியைத்தான் தள்ளநேர்ந்தது. பரீக்ஷையில் அண்ணு எழுதிய மறுப்பு மறுக்க முடியாமலிருப்பதனுல்.

6. வினு:—ஸம்பந்தாதிகரணத்தில் "ப்ருஹதாரண்யகே ச்ரூயதே" என்று ஸ்ரீ பாஷ்யோபக்ரமமிருப்பதில் "ச்ரூயதே" என்கிற க்ரியாபதம் அநந்விதமாகையால் அதைத் தூக்கியெறிய வேண்டியதென்று கோழியாலம் ஸ்வாமி யெழுதியிருக்கிருரே, அதைத் தூக்கியெறிந்தீரா?

விடை:—ஸ்வாமி யெழுந்தருளியிருந்தால் அவரைத் தூக்கியெறியலாம்; அவருடைய உக்தியைத்தான் தூக்கியெறியவேண்டும்படி அண்ணாவின் நிரூபணமிருந்தது. என் செய்வேன்? ஆசார்யோக்தி திரஸ்காரபாபம் அபரிஹார்யமாயிற்று.

7. விஞ:—ரசநாநுபபத்தியதிகரணத்தில் *விப்ரதிஷேதாச்ச* என்கிற ஸூத்ர ஸ்ரீ பாஷ்யத்தில் "பந்தமோக்ஷஸாதநாநுஷ்டாநம் மோக்ஷஞ் ச ப்ரக்ருதேரேவ—இத்யாஹு:" என்றிருப்பதில் "இங்கு இதிபதம் இருக்கத் தகாதென்று நிச்சயமாய்ச் சொல்லுவேன்; த்விதீயையிருக்குமிடத்தில் அது இருக்கக்கூடாதாகையால்" என்று கோழியாலம் ஸ்வாமி எழுதியிருக்கிறரே; அந்த இதியையெடுத்தெறிந்துவிட்டீரா?

விடை:—யதியிருந்தால் ஒருவாறு எடுத்தெறியலாம்; இதியின் உபபத்தியை அண்ணா வெகு ஸமஞ்ஜஸமாக நிரூபித்திருப்பதனால் தெளிவுற்றேன். "அத்ர இதிபதம் ந ஸ்யாதிவ" என்றெழுதியிருக்கலாம் ஸ்வாமி; "ந ஸ்யாதிதி நிச்சீயதே" என்றெழுதினது அவஜ்ஞையாய்விட்டது. இங்கு அண்ணாவின் நிரூபணம் அதிமநோஹரம்.

8. விஞ:—*விப்ரதிஷேதாச்சாஸமஞ்ஜஸம்* என்கிற அந்த ஸூத்ர பாஷ்யத்திலேயே *ஸங்கிதே: அகிஞ்சித்கரத்வம்* என்றிருப்பதை அகிஞ்சித்ருபத்வ மென்று திருத்தவேணுமென்று நிச்சயமாகச் சொல்லுவேனென்று கோழியாலம் ஸ்வாமி யெழுதியிருக்கிறரே; இந்த நிச்சயத்தையாவது நிலைநாட்டினீரா?

விடை:—எந்த நிச்சயமும் சாசுக்குதவாததாயிற்றே. அதைப் பாடாந்தரமாகப் போடவுங்கூட நெஞ்சாலும் நினைக்கமுடியாதபடியன்றோ அண்ணா வரைந்திருக்கிறார்.

9. விஞ:—ஸஹகார்யந்தர வித்யதிகரணத்தில் ஸித்தாந்தத்தில் "ச்ரவணமநநாப்யாம் ப்ராப்தம் வேதநம் ப்ரதிலப்ய இத்யர்த்த:" ப்ராப்தம் என்றதை அப்ராப்த மென்று பெரியார்களின் உபதேசத்தைக்கொண்டு அண்ணா திருத்தியிருந்தாரே; பாவ ப்ரகாசிகையில் ப்ராப்தம் என்கிற பாடம் ஆதரிக்கப்பட்டிருப்பதைக்கொண்டு கோழியாலம் ஸ்வாமி "ப்ராப்தமென்றிருந்தாலும் அப்ராப்தமென்றிருந்தாலும் உபய பாடத்தையும் நிர்வஹிக்கக் குறையில்லை" என்றெழுதியிருந்தாரே, அங்கு என்செய்தீர்?

விடை:—என்ன செய்ய முடியும்? ஆசார்யாபிப்ராயரக்ஷணம் அப்ராப்தமென்று முடித்தேன். அண்ணாவின் நிரூபணம் அசைக்கமுடியாமலன்றோ இருக்கிறது.

10. விஞ:—ஸ்வாசார்யர் காட்டின திருத்தங்களை உபேக்ஷித்ததுபோல அண்ணா காட்டின திருத்தங்களையும் உபேக்ஷித்ததுண்டோ?

விடை;—அது எப்படி முடியும்? *தத்ர ஸ்ரீர் விஜயோ பூதிர் த்ருவா நீதிர் மதிர் மம* என்று அடியேன் விஜ்ஞாபிக்கவேணுமா?

முடிவான விஞ:—அப்படியானால் அண்ணாவின் பரீக்ஷாக்ரந்தத்தை மறுக்கவேணு மென்று ஸதஸ்ஸுக்குச் சென்றீரே; எங்ஙனம் சென்றீர்?

விடை:—இப்போது நெஞ்சு தளும்பியிருக்கிறது; ஆலோசித்துச் சொல்லுகிறேன். (விரிவு அடுத்த வடமொழி நூலில்.)



# ஓர் அருமையான விஷயம்.

## ஸ்ரீ பாஷ்யாதிகாரிகளுக்கு உயர்ந்த விருந்து.

ஸ்ரீ பாஷ்ய பாடங்களின் உண்மையைக் கண்டுபிடிப்பதற்குப் பல வழிகளுண்டு. அவற்றுள் ஒரு வழியை—மிக முக்கியமான வழியை இங்கு விஜ்ஞாபிக்கிறேன். சததூஷணி முதலான புராதன க்ரந்தங்களில் ஸ்ரீ பாஷ்ய பங்க்திகள் பலவிடங்களில் கையாளப்பட்டிருக்கின்றன. அவ்விடங்களில் காணும் பாடங்களையும் ஸ்ரீ பாஷ்ய கோசங்களிற்காணும் பாடங்களையும் ஒத்திட்டுப் பார்க்கும்போது வாசி காணப்பட்டால் எந்த பாடம் யுக்தமென்று தகுந்த ஸாமக்ரிகளைக்கொண்டு நிர்ணயிக்கவேணும். குறிப்பாக ஓரிடமெடுத்துக் காட்டுகிறேன். கண்ணுடையீர்! காண்மின்.

சததூஷணியில் ஒன்பதாவது வாதத்தின் உபக்ரமத்தில் [அடியேனுடைய தேசிக க்ரந்தமாலா பதிப்பு—பக்கம் 77ல்]—"விஸ்தரேண குத்ருஷ்டிமதம் அநுபாஷ்ய *ததிதமித்யாதிநா *ந்யாயாநுக்ருஹீத வாக்ய ப்ரத்யக்ஷாதி ஸகல ப்ரமாண விருத்த யாதாத்ம்யளித்பி: அநாதரணீயம்* இத்யங்தோந சிஷ்யாந் ப்ரதி உபதிசதோ பாஷ்யகாரஸ்ய அயம் பாவ:" என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. இந்த சததூஷணீ வாக்யத்தில் உபாத்தமான ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியானது மஹா ஸித்தாந்த—உபக்ரமத்திலுள்ளது. இங்கு ஸ்ரீ பாஷ்யப் பதிப்புகளொன்றிலும் "ந்யாயாநுக்ருஹீத" என்றதற்கடுத்தபடியாக (வாக்ய) என்பது காணப்படவில்லை. சததூஷணிப் பதிப்பு சுத்தமா? ஸ்ரீ பாஷ்யப் பதிப்பு சுத்தமா? என்று பராமர்சிக்க வேணும். ந்யாயாநுக்ருஹீதத்வம் வாக்யத்தில் அந்வயிப்பதன்றோ ஸ்வரஸம். இங்கு ச்ருதப்ரகாசிகையை ஊன்றி ஸேவிக்குமிடத்து (வாக்ய) என்றிருப்பது அவசியமென்றே விளங்குகின்றது. ப்ரஸக்திவசாத் இது விஜ்ஞாபிக்கலாயிற்று. லகுஸித்தாந்தோபக்ரமத்திலும் இங்ஙனே விஷயமுள்ளது. ஸ்ரீ பாஷ்ய ப்ரவசந ப்ரவீணர்கள் இத்தகைய விஷயங்களை விமர்சித்து உலககுககு உபகரிப்பது நன்று.

## —பஞ்சபர்வாதி உத்ஸவ விசேஷங்களின் குறிப்பு—

வைகாசி 21 ஏகாதசி. 32 அமா. 17 திருவிசாகம். 20 திருமூலம். 23 திருவோணம்.

ஆனி 12 ஏகாதசி. 16 பௌர்ணமி. 12 திருவிசாகம். 15 திருமூலம். 18 திருவோணம்.

ஆடி 9 திருவிசாகம். 12 திருமூலம். 14 திருவோணம்.

ஆவணி 1 ஹஸ்தம். மாதப்பிறப்பு. 8 ஏகாதசி. 22 ஏகாதசி. 26 அமா. 29 ஹஸ்தம். 4, 31 திருவிசாகம். 7 திருமூலம். 10 திருவோணம்.

புரட்டாசி 1 மாதப்பிறப்பு. 9 பௌர்ணமி. 21 ஏகாதசி. 28 திருவிசாகம். 3 திருமூலம் 6 திருவோணம்.

ஐப்பசி 9 பௌர்ணமி. 20 ஏகாதசி. 22 ஹஸ்தமும் வெள்ளிக்கிழமையும். 24 அமாவாசை. 3 திருவோணம் 25 திருவிசாகம் 28 திருமூலம்.

கார்த்திகை 1, 28 திருவோணம். மாதப்பிறப்பு. 5 (கைசிக) ஏகாதசி. 22 திருவிசாகம். 25 திருமூலம்.

தை 5 ஏகாதசி. 20 ஏகாதசி. 18 திருவிசாகம் 21 திருமூலம் 24 திருவோணம்.

மாசி 16 திருவிசாகம் 19 திருமூலம். 21 ஏகாதசி. 22 திருவோணம். 24 அமா.

பங்குனி 1 மாதப்பிறப்பு. 11 ஹஸ்தம். 20 ஏகாதசி. 24 அமா. 14 திருவிசாகம். 17 திருமூலம்.

## —நம்பிள்ளை ஸன்னிதி உத்ஸவ விசேஷங்கள்—

ஆனி 2௳ முதல் 11௳ வரை வடக்குத் திருவீதிப் பிள்ளை யுத்ஸவம்.

ஆவணி 10 முதல் 19 வரை பெரியவாச்சான்பிள்ளை யுத்ஸவம்.

ஐப்பசி 28 முதல் கார்த்திகை 8 வரையில் நம்பிள்ளை யுத்ஸவம்.

தையீ 1௳ (ரேவதி.) அத்யயனோத்ஸவ சாத்துமுறை.

Rgd. No. 2975 ஸ்ரீராமாநுஜன்

## ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா விளம்பரம்

1966 ஜனவரிமீ புதுப்பிக்கப்பட்ட ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபைக்கு வருடச் சந்தா ரூ. 25—00. செலுத்தி மெம்பர்களாகச் சேரவேண்டியது. அவர்களுக்கு ஸ்ரீராமாநுஜன் பத்ரிகை தனிச் சந்தா இல்லாமல் அனுப்பப்பட்டுவருவதுடன் இருபது ரூபா விலையுள்ள புத்தகங்களும் அளிக்கப்படும். அவர்கள் நம்முடைய புத்தக ஜாபிதாவைத் தருவித்துப் பார்த்து அதில் தங்களுக்கு விருப்பமான (20 ரூ. விலையுள்ள) நூல்களுக்கு ஆர்டர் செய்யலாம்.

இப்படிக்கு,
ஷை ஸபையின் பிரஸிடெண்டு P. B. A.

நமது ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்–3.

(2) V. N. Devanathan,
213. Govindappa Naicken St., G. T. Madras.

(3) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(4) A. RAMANUJACHARI, B. A.,
A 230 E. Type, Pandara Road, New Delhi.–11.

If un-delivered please return to:
P. B. ANNANGARACHARYA,
KANCHEEPURAM–3.

417. Sri Vangeepuram Raghavacharya,
MELKOTE.
(Mysore State)



Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press.
Sannidhi Street, Kanchipuram–3.